REGD 4642 M

ந்தா விபரம்
—
ஆண்டு ரூ 7,
„ 380

# திராவிடநாடு

16 பக்கம்
விலை
இரண்டணா

இலங்கை 15 சதம் | மலாய்நாடு 12 காசு

மலர் 8 | 4–6–50 | இதழ் 49

## நாளைக்கொரு திட்டம் போடுகிறது சர்க்கார்!




## நாட்டுமக்களுக்கோ வாட்டந்தான் வரவு!




சிறு கதை

# புதிய நாயனர்

கோர மோட்டார் விபத்து

ஓடிக்கொண்டேயிருந்த மோட்டார் திடீரென மரத்தில் மோதிக் கோரமான விபத்திற்குள்ளாயிற்று. உயிர்ச் சேதம் ஒன்றுமில்லாவிட்டாலும் பயங்கரப் படுகாயமடைந்தோர் எண்ணிக்கையில் அதிகம்.

—பத்திரிக்கைச் செய்தி.

ஐயோ பாவம்! நாளை காலை மணம்; இன்று இரவு அடி, இரத்தம்! மணமாக வேண்டிய பெண்ணும், அவளுடன் வந்த திருமணக் கூட்டமும் அடிபட்டு ஆபத்துக்குள்ளாயினர்.

—வழிப்போக்கன்.

நாள் பார்த்து, நல்ல நேரம் பார்த்துக் காரியத்தை செய்யுங்கோன்னு...!

—சோதிடர் வெங்கிடு சாஸ்திரி.

ஆண்டவன் வைத்த நாட்களிலே, கெட்டது என்ன, நல்லது என்ன வாழுது!

—ஒரு பெரியவர்.

தெய்வப் பிரீதியான காரியம் என்றுதான் இதைச் செய்தேன். ஆனால் ஏதோ சகுனத் தடை வந்துவிட்டது. இந்தக் குட்டி அழுததோ, அந்தப் பயல் அடம் பிடித்ததோ... யார் கண்டார்கள்? சிவத் தொண்டை எதிர்த்து எவர் நின்றாலும் விடமாட்டேன்; மகனானாலும், மகளானாலும்!

—கண்ணப்பர்.

அப்பொழுதே சொன்னேன், கேட்டாரோ, இன்று அவதிப்படுகிறார்! நான் வெற்றி பெற்றேன்.

—மணிவாசகம்.

என் மகன் தணிகாசலத்திற்குவரப்போகிற பெண், ஒரு சைவ முதியவர்—பூலோகம் போற்றப்போகிற ஒரு புதிய நாயனர் வீட்டைச் சேர்ந்தவள் என்று, என் மகன் சாதகம் சொல்கிறது.

—சிவநேசர்.

வைத்த நாள் தவறாமல், தாலியைக் கட்டிடுங்க! அது தான் நல்லது.

—மாப்பிள்ளை வீட்டார்.

சிவனுக்குப் பிடிக்காத இந்தத் திருமணத்தை எப்படியப்பா, நான் செய்துகொள்வது?

—தணிகாசலம்

தப்பிப்பிழைத்தேன்!

—முகில்.

சாக இருந்தவள், மோட்டார் விபத்தால், தப்பிவிட்டாள்!

—மருதப்பன்.

இத்தகையத் துண்டுச்செய்திகளின் துணைகொண்டு வரிக்கழுதை நாயனர் வரலாறு உருவாக்கப்பட்டுள்ளது. இவர் அறுபத்து நான்காவது நாயனர் -புதிய சமயக்குரவர்! நிகழ்ச்சி, அறுபத்து ஐந்தாவது திருவிளையாடல், எண்ணிக்கையில் ......படியுங்கள்.

X X X

பஸ் கண்டக்டர் பரமானந்தம் 'டிக்கட் சார்...பணங் கொடுக்காதவர்கள் கொடுத்து வாங்கிக்கோங்கோ...'என்று உரக்கக் கூவினன்.

அவர்கள் திரும்பியும் பார்க்காமல் பேசிக்கொண்டிருந்தனர், 'வளவளன்னு...' எதை யெதைப் பற்றியோ!

"வந்த கதையை முடித்துகிட்டு உங்க சொந்த கதையைப் பிறகு பாருங்க!"

என்று சீறினன். அப்பொழுதும் அவர்கள் செவிடர்களாகவே இருந்தனர். அவன் வார்த்தைகளுக்குத் துளியும் மதிப்புத் தரவில்லை அவர்கள்!

"தம்பி, நம்பினா நம்புங்க, நம்பா
டிப் போங்க! எனக்கென்னமே
இந்தச் சகுனம், சாத்திரம், சோதி
டம் இவைகளிலே அழுத்தமான
நம்பிக்கை. உன் வயசுதானிருக்கு
என் பெரிய பயலுக்கு! என்
எதிர்த்துப் பேசுவதுதான் அவன்
வேலை! பெரியவங்க எதை யெதை
செய்யணும்னு ஏற்பாடு பண்ண
யிருக்காங்களோ, அவை யெல்லாவ
றையும் ஒழித்துக் கட்டுவதுதான்
அவன் வேலையாம். என் மகன்த
னப்பா-இருந்தாலும் இந்தத் துடு
குப் புத்தித் தலையெடுக்க வொ
டாதபடித் தட்டியடக்கணும்!

'தடிக்கழுதை யாட்டமா வளர்
துட்டான். சரியான புத்திதான்
இல்லை!'

அந்தப் பெரியவர் இப்படி
'காலட்சேபம்' செய்துகொண்டிரு
தார். அதை வேண்டா வெறுப்பி
கேட்டுக்கொண்டிருந்த மற்றவர் த
யசைத்துவிட்டு 'ஹூம்' கொட்
ஞர்!

'தம்பி, நாளைக்குக் காலையிலே எ
மகளுக்குக் கல்யாணம். நாள் பார்
தல், நட்சத்திரம் பார்த்தல் இ
களை அலட்சியமாகப் பேசுது
இந்தக் காலத்துப் பிள்ளைங்க—அ
களுக்கு ஒரு சூடு — இன்னைக்
நடந்தது! அநாமதேய பஸ் சர்வீ
ஒன்றாவது குறிப்பிட்ட நேரத்தி
வந்ததாகக் கனவிலாவது கண்
துண்டா?' எங்க வெங்காயபட்
வெங்கிடு சாஸ்திரி என்ற பிரப
சோதிடர்தான் நாள் பார்த்
கொடுத்தார். பெண் அழைக்
இன்று மாலை நாலேகால்னு குறி
பிட்டார். சொல்லி வைச்ச மாதி
வந்துதே வண்டி!' என்று பூ
போடு தனது பிரசங்கத்தை
டினர் மேலும். சுவையைக் கூட்
னர் மீண்டும்!

'எனக்கு வரப்போகிற மருமக
பிள்ளையாண்டானை என் மகளுக்கு
பிடிக்கலைதான். என் மகன்-அதா
தம்பி, இந்த விதண்டாவாதக் கட்
யிலே சேர்ந்திருக்கிறனே மணிவா
கம், அவன்தான், அவன் வீட்



டோடே வெளியேறிவிட்டான். என் மகள் முகிலுக்கு மருதப்பன் என் பவன்மீது ஆசை—நம்ம சாதிப் பிள்ளையாண்டானாயினும் சாதகப் பொருத்தம் சரி வரல்லே! அதனால் தான் சங்கம்பட்டி சிவநேசர் மகன் தணிகாசலத்தை ஏற்பாடு செய்து விட்டேன்"

"அதிலே ஒரு புதிய விஷயம் பாரு தம்பி...எனக்கு சிவத் தொண்டில் நெடுநாள் பித்து! நாயனாராகவேண்டும் என்று நாயாய்த் தொண்டாற்றி வருகிறேன். அதற்கேற்றாப்போலே சிவநேசருக்கு வரப் போகிற மருமகள், ஒரு நவீன நாயனர் வீட்டிலிருந்து கிடைக்கப்போகிறாள் என்று சொல்லியிருக்கு அந்தப் பிள்ளையாண்டான் சாதகத்திலே! எப்படி தம்பி, தெய்வசங்கல்பம்! நானும் நாயனாகிறேன். மகளுக்கு எற்ற இடத்தில் கணவன் கிடைத்துவிட்டான்"

அவர் தன் மகள் திருமணப் புராணத்தை நிறுத்தாமல் தொடர்ந்து பேசினர். இதுவரை பொறுமையோடு கேட்டுவந்த கோபாலுவுக்குக் கோபம் கோபமாக வந்தது!

"சரிதான் நிறுத்தய்யா, மனுசன் வயிறெரிந்து வர்ரான். இந்த அவதியிலே இந்தக் கிழவர் வேறு என் உயிரை வாங்குறாரு. நாள் பார்க்கணுமாம்—நாள்! ஆமாம், என் வீட்டுக்காரிகூட அப்படித்தான் சொன்னள். அவ பேச்சைத் தட்டக்கூடாதுன்னுபுட்டு நல்ல நாள் பார்த்து, வேளை கேட்டுகிட்டுக் கோர்ட்டுக்குப் போனேன். என் ஆசையிலே மண்வெட்டிக் கொட்டி விட்டாங்க! கேசு தோற்றுப் போச்சு! அதே நேரம்—நாலேகால் மணிக்கு—என் வழக்கின் தீர்ப்பைப் படித்து விட்டான் நீதிதேவன்! இவருக்குப் பெண் அழைக்க நல்ல நாள். எனக்குப்பிணநாள், கொலைநடந்த கோணல் பொழுது! இவர் நாயனாக, இவர் மகள், எவனையோ ஒரு குரங்கைக் கட்டிக்கணுமாம்! சும்மா யிருங்கய்யா!" என்று கூவி விட்டான் ஆத்திரத் தாக்குதலால் அலைமோதிக் கொண்டிருந்த அவன் மனக் கொந்தளிப்பிற்கு முழு உரிமை கொடுத்து விட்டு!

கோபாலுக்கு, அந்தப் பக்கத்து ஆட்கள் முழுவதும் தெரியும். 'கேசுக்கார கோபாலு' என்று பட்டப் பெயர் வேறு அவனுக்கு! கோயில் அவனுக்குக் கோர்ட்! நீதிபதிதான் அவனுக்குக் கடவுள்! ஆட்டை மாட்டை, நாட்டை, காட்டை விற்று விட்டு, அந்தச்சொற்பத் தொகையையும் இப்படி இழந்துவிட்டுப் பரிதாபச் சித்திரமாய் இருந்தான்.

அவனிடம்தான் அந்தப் பெரியவர் பேசிக் கொண்டிருந்தார். பஸ் கண்டக்டரின் கடுமையான குரலையும் அட்சியப்படுத்திவிட்டு! இப்படி கோபால் திடீரென்று இரைந்து பேசவும் அவர் அடங்கிவிட்டார்.

* * *

அந்தப் பாதையில் மோட்டார் ஓட்ட வீராதி வீரர்களெல்லாம் திணறிக் கொண்டிருக்கையில், மிஸ்டர் அநாமதேயம் தனக்கே அந்தப் பாதையை ஏகபோக உரிமையாக்கிக்கொண்டார். இரண்டு வண்டிகள் அந்தப்பாதையில் ஓடும். குறிப்பிடும் நேரம் கிடையாது. அந்தப் பாதையோ 'குண்டுங் குழியுமாய்' இருக்கும்.

டிரைவர் துரைதான் அங்கு சார்லஸ் மன்னன். அவன் இட்டது சட்டம். அவன் முகங் கோணுதவாறு பார்த்துக்கொள்வார்கள் அந்த வழியாகச் செல்லும் பிரயாணிகள். இல்லாவிட்டால் ஒற்றைக்கால் தவமிருக்கச் செய்துவிடுவான் ஒரு நாள் முழுவதும்! அவர்கள் விரும்பினல் டிக்கட் கொடுப்பார்கள். இல்லையென்றால் அந்த ஈசனே, சிவகாமி நேசனே வந்தாலும் ஆபத்து, ஆபத்துத்தான்!

'டிக்கட் கொடுப்பா'......என்று கொஞ்சம் குரலைத் தடிக்கவிட்டால் போச்சு, வந்தது வினை; அன்று முழுவதும் அந்த வேகாத வெய்யிலில் நின்று கருகவேண்டியதுதான். கேட்பவர் எவருமில்லை!

அந்த அநாமதேய பஸ் சர்வீஸாரின் கடைசிவண்டி அவ்வளவு வேகமாக ஓடிக்கொண்டிருந்தது ஏனே என்றுஎவருக்கும் புரியவில்லை! டிரைவர் துரைக்குமட்டும்தான்வெளிச்சம் ...அவன் முகம்மட்டும் வாடி யிருந்தது. ஆகவே ஏதோ புரிந்துகொள்ள முடியாத புதிர் ஒன்று நடந்து விட்டது என்பதுமட்டும் புரிகிறது. அவன் வரவர வேகத்தை அதிகப் படுத்திக்கொண்டே இருந்தான்.

மோட்டார் ஓடிற்று. வேகமாக ஓடிக்கொண்டிருந்தது — அதிவேகமாக ஓடிக்கொண்டிருந்தது.

X X X

கண்ணப்பருக்கு வயது எழுபதுக்குமேல் — இருந்தாலும் பார்வைக்கு அவ்வளவு கிழவராகத் தெரிவதில்லை. அவர் சைவப்பழம்! அவர்உடலெங்கும்திருநீற்றின் வெண்ணிறக்காட்சி! வரி வரியாக மேலெங்கும் கோடுகள் தீட்டியிருப்பார். அவர் நாயனரில் அறுபத்து நான்காவதவராக இருப்பார்—இருக்கவேண்டும் என்பது அவர் ஆசை—சிவபெருமான், கூடலில் ஆடிய அறுபத்து நான்காவதோடு, அறுபத்து ஐந்தாவதாக அவர் பொருட்டொன்று நடத்திவிடவேண்டும் என்பது அவரது நெடுநாள் ஆசை.

அவரை, அவரது ஊர் 'முற்றாத மீசையினர்' என்னென்னமோ பெயரிட்டழைப்பார்கள். அவருக்குக் கொஞ்சம் கோபம்—அதுவும் அவரது மகன் மணிவாசகம் அந்தக் "காலிக்கூட்டத்திற்கு" தலைமைவகிக்கிறான் என்றால் அதுகூட வராதா என்ன! பலர் அவரை......நான் எப்படிச்சொல்வது, இரகசியமாகச் சொல்லிவிடுகிறேன், அவர் காதில் விழாமல்!..."வரிக்கழுதை நாயனர்" என் வாய்கூசாது அழைப்பர். வரிக்குதிரை என்றால்கூட வருந்தியிருக்க மாட்டார். பரி நரியான படலத்தை ஒருமுறை படித்துவிட்டு, இருமுறை பெருமூச்சுவிட்டு விட்டு, இருந்துவிடுவார். கழுதை என்று சொல்லுகிறபொழுதுதான் அவர் வேதனை இரட்டிப்பாகும். நாய், பன்றி, கழுகு, மயில், பெருச்சாளி, அது, இது....எதுவானாலும் சொல்லட்டும். ஒவ்வொரு ஆண்டவனேடு ஒட்டிக்காட்டித் தப்பித்துக்கொள்வார். கழுதையென்றால் அவர்முகம் சிறுத்துவிடும். மூதேவி வாகனமய்யா அது, இலட்சுமியின் அக்காளின் இஷ்டமான பிராணி....என்று மேலும் அவரது ஆத்திரத்தைக் கிண்டிக் கிளறிவிடுவர் அந்தக் குறும்புக்காரச் சிறுவர்கள்.

அவருக்கு ஒரு மகன் — பெயர் மணிவாசகம். அவன் ஊரிலே பகுத்தறிவுவாதிஎன்றகெட்டபெயரைமிக இளமையிலேயே எடுத்துவிட்டான்! மகள் முகில்—அவளுக்குத்திருமண ஏற்பாடுவகையில் வெறுப்புவளர்ந்து

வேதனை முற்றி, விரோதமாகி விட்டது!

மகளுக்கு விருப்பம் மருதப்பனை மணக்க! — தந்தையோ பணத்தை எண்ணிப்பார்த்துவிட்டுத் தனிகா சலத்தைத் தெரிந்தெடுத்தார், குணத்தை ஆராய்ந்து பார்க்காமல். மணிவாசகம் முகிலை மருதப்பனுக்குக்கொடுக்கவேண்டும் என்று மன்றாடினன்—ஒப்பவில்லை தந்தை — வெளியேறிவிட்டான். தங்கை அழுதாள்-அண்ணனைக்கட்டிக்கொண்டு! தந்தை அதட்டினர், மிரட்டினர். ஆனல் மகளின் மனதறிந்து நடக்க மட்டும் விரும்பவில்லை-முகில்தேற்றுவாரற்றுக்கிடந்தாள் — எப்பொழுதும் தேம்பியபடி! தாய் "சிவலோக யாத்திரை"போய்விட்டாள்! ஆகவே, அவளுக்கு அவளே துணை!

பெண் என்றாலே காய்ச்சிய இரும்பு என்று எண்ணிக்கொள்கிறார்கள். தங்கள் விருப்பம்போல அடித்துவடித்துக்கொள்ளலாம் என்று எண்ணிவிடுகிறார்கள்! அதனுல்தான் முகிலை ஒரு வைதிகக் குடுக்கைக்குக்கொடுக்க முன்வந்தார் கண்ணப்பர் — ஆம், வரிக்கழுதை நாயனர்!

அவர்தான் கேசுக்கார கோபாலுவுடன் அவ்வளவு சுவாரஸ்யமாக திருமணப் புராணம் படித்துக்கொண்டு வந்தார். மணமகன் தேடு படலம், மகன் வெளியேறு படலம், மருதப்பன் காதல் படலம், முகிலின் முகாரி படலம்......என்று பலபடலங்களைப் படித்துக்கொண்டிருந்தார். எதிரி லிருப்பவர்கள் இதை கவனிக்கிறார்களா, இல்லையா என்ற அக்கரை துளியும் இன்றி!

அவர், சோதிட ஆராய்ச்சி, ஆருடப் பயிற்சி, நாள் வைக்கும் நற்பழக்கம்...இத்யாதி சத் விஷயங்களிலீடுபடவே, கோபாலு சிறி விழுந்தான். தன் ஆத்திரத்தைக் கொட்டியளந்தான்!

X X X

மோட்டார்மட்டுமா ஓடிக்கொண்டிருந்தது! அதில் உட்கார்ந்திருந்தோர் அத்தனைபேர் இதயங்களும் ஓடிக்கொண்டே இருந்தன!

மோட்டார், ஊரைவிட்டுக் கிளம்பியதுதான், கண்ணப்பரின் இதயம் பூரிப்பால் வீங்கிவிட்டது! எங்கே, என்ன தடங்கல் வந்துவிடுமோஎன்று ஏங்கிக் கிடந்த அவருக்குப் புரோகிதன் தந்த குறிப்பு தவருமல், மோட்டாரும் கிடைக்கவே, 'தத்துக்கிளி' நாட்டியம் போட்டார்.

அவர் அப்படியொன்றும் குசேல மாமுனி இல்லை—ஏதோ அவருக்குப் பணக்காரர் என்று ஊரார் சொல்கிற அளவு சொத்திருந்தது. ஆனல் அதைக் கொண்டு திருப்தியடையாமல் மகளை 'விற்று' நாயனராக முயன்ருர்......வெட்கம், வேதனை!

எங்கே தனிக் கார் வைத்துவிட்டால் செலவுக் கூடிப்போகுமோ என்ற பயத்தால், வழக்கமான மோட்டாரை நாடினர்.

ஆகவேதான் அவர் அருகிலிருந்தவரிடமெல்லாம் தனது வீரப் பிரதாபங்களையெல்லாம் எடுத்துக் கூறினர். கண்டக்டர் குரலைக், காதுக்கு வாங்கிக்கொள்ளாமல் கதை பேசிக் கொண்டேயிருந்தார்.

"தம்பி, கேட்டீங்களா ஒரு சங்கதியை. நாள் பார்க்கிறது தப்பு என்றான் என் மணிப் பயல். திருமணத்திற்குப் புரோகிதன் வருவது தன்மானத்திற்கு இழுக்கு என்று ஒரு அடி மேலே போய்விட்டான், அவன் கூடவந்த 'ஒரு தத்தாரி'!..."

"ஐயா, பெரியவரே! என் வயித்தெரிச்சலை சும்மா அதிகப்படுத்தாதீங்க! நான் வாழ்ந்து கெட்டவன்! உமக்குப் பெண் அழைப்புக்கு ஏற்ற புனித நேரத்தில் என் கேசு தோற்றது. அதை எப்படி நான் நல்ல நேரமின்னு ஏத்துகிறது!"

இப்பொழுது கொஞ்சம்சாந்தமாகப் பேசினன், கோபால்.

"அவரவர் விதிப்படித்தானே நடக்கும்! அன்னைக்கு எழுதியதை யார் அழித்தெழுதமுடியும்? ஆயா சப்படாதே தம்பி......... அவனே நினைத்து அனுதினமும் வேண்டிக்கோ. நல்லதை செய்வான், நம ஈசன், சிவகாமி நேசன்"

'உபதேசபுரியார்' ஆனர், வரிக்கழுதை நாயனர்!

"இந்தப் புத்தி கொஞ்ச நேரத்திற்கு முன்னலே எங்கேபோயிருந்தது!" என்ருன் அவன்.

'ஆத்திரத்திலே பேசுறே தம்பி, நிறுத்தி நிதானமாக யோசி...' என்ருர் நாயனர் மீண்டும்.

"அட, அப்போ நீங்க ஏன் மோட்டாரைத் தேடி வந்தீங்க? வீட்டிலேயே உங்க பெண்ணை வைச்சிகிட்டு பார்த்திருக்கலாம்......ஆண்டவன் என்ன செய்திருப்பார்னு பார்த்திருக்கலாம்!" என்றான் கேலி கலந்த குரலில்!

நாயனர் வாயடைத்துப் போனர், திரும்பிப் பார்த்தார். அவர் மகள் முகிலின் கண்களில் நீர். அதனைத் துடைத்து விட்டபடியே அவள் தோழி எதையோ சொல்லிக்கொண்டிருந்தாள்.

X X X

மோட்டார் போய்க் கொண்டிருந்தது. ஆனல் முகில் ஏதோ ஒரு வருணிக்க முடியாத விசித்திர உலகத்தில் நடமாடிக் கொண்டிருந்தாள்.

அவள்மனம் சுழன்றோடும் மோட்டார் சக்கரத்தோடு போட்டியிட்டுக் கொண்டிருந்தது.

இம்மாதிரி இரவுதான் அன்றும் ...மங்கலான ஒளி! இதோ அவளுக்கு எதிர்ப் பலகையில் உட்கார்ந்திருக்கும் மருதப்பனும் அவளும்... அந்த நிலா முற்றத்திற்குக்கூடக் கூச்சமாக இருந்திருக்கும்...அப்படிக் கூடியாடிக் கிடந்த ஜோடிப் புறுக்களை அவளது தந்தை யுருவிலே வந்த பாவி! அதுகூட அவளுக்கு அழுகையை அதிகம் தரவில்லை. 'அவரை'யும் வலுக்கட்டாயமாகக் கூட்டிவந்து இந்தக் 'கேடுகெட்ட' காட்சியைக் கண்டு மனம் விண்டுச் சாகவேண்டும் என்று எண்ணினரே அவளது தந்தை, அதைத்தான் அவளால் சகிக்க முடியவில்லை.

மருதப்பன் அவர் வீட்டுக் கணக்காக இருக்கலாம். இருந்தாலும் எழிலுள்ள வாலிபன். அவளுக்கு தூரத்து உறவு—ஆனல்அவளுக்கு மிகநெருங்கியவர் இப்பொழுது!இதனையும் தெரிந்தும். ஏன் இப்படிச் செய்கிறார்? ஊரிலேகேலி பேசுகிறார்களே, வரிக்கழுதை யென்று! அது சரிதான் போலும்!

ஒருநாள் மருதப்பன் தோளில் அவள் சாய்ந்து கிடந்தபொழுது அவன் கேட்டான் பரிதாபத்தோடு! "முகி......இன்று இப்படிக்குதூகலமாக இருக்கிறோம். நானே ஏழை. உங்கள் வீட்டு வேலைக்காரன். கணக்கு எழுதிக் கூலி வாங்குபவன்.

(13-ம் பக்கம் பார்க்க)



# இந்தப் போக்கு, கூடாது!

"சீர்கெட்டவனே, சிரிக்காதேடா! உன் சிரிப்பையும் சேட்டையையும் கண்டால் சீற்றம் உருவாகிறது எமக்கு. கையில் கிடைத்ததைக் கொண்டு வீதியில் வருவோர்மீது வீசி விளையாடுகிருயே-அது விவேகமல்ல என்று கூறினல், கோபம் மட்டும் வருகிறதே குதித்துக்கொண்டு! கொஞ்சம் நிதானி—பின் கூறு, உன் செய்கை சரியா என்று!" என்பதாக, வழியில் நின்றுகொண்டு, வக்கிர புத்தியுடன் வருவோர் போவாரையெல்லாம் வம்புக் கிழுப்பவனிடம் கூறினல்—கொஞ்சம் புத்தியுடையவன் என்றால், 'கூறுகிறாரே யோசிப்போம்' என்று நிதானிப்பான். கூறப்பட்ட பேர்வழி, சிந்தையில் தெளிவில்லாதவனுகயிருந்தால், 'கூறவந்துவிட்டாயோ புத்திமதி! போடா, போ! இப்படித்தான் நான் செய்வேன்' என்று கோணல் புத்தியுடன் குரங்கு சேட்டைகளில் ஈடுபடுவான்.

நாட்டின் சில பல இடங்களிலிருந்து நமக்கு வரும் செய்திகளைக் கண்டபோது, ஆளவந்தாரும், நாம் குறிப்பிட்ட 'கோணல் சேட்டை' யின் கூட்டாளிகளோ என்ற சந்தேகம் உதயமாகிறது.

பித்தனின் நடவடிக்கைகளைக் கண்டு பிடிக்காமல், சேட்டைகளைக் கண்டு சிரித்தால் "என்னைப் பார்த்து ஏன் சிரித்தாய்? என்ன திமிர் உனக்கு—நானு பைத்தியம், நீங்கள் தான்!" என்று கூச்சல் போடுவான். இது சகஜம்; பித்தன் சித்த சுவாதீனமில்லாதவன் என்பதால்.

சென்னை அரசியலார், பித்தனின் இரகத்தைச் சேர்ந்தவரல்ல—வெய்யிலின் கடுமையால் 'விளைவு' பலமாக மூளையைத் தாக்கிவிட்டதோ என்று கூட எண்ண முடியாது அவர்களைக் குறித்து! ஏனெனில், கோடை வெய்யிலின் கொடுமையைப் போக்கிக், 'குளிர்வாசம்' அனுபவிக்கும் வசதியைப் பெற்றவர்கள். எனினும், வெளியூர்களிலிருந்து புகார் வரும் அளவுக்கு நடந்துகொண்டிருக்கின்றனர்! தங்களது குறைகளை எடுத்துக் காட்டி, 'இது சரியல்லவே, இதை மாற்றிக்கொள்ள வேண்டாமா?' என்று நாட்டின் நன்மையை மனதில் வைத்துப் பாடுபடும் நம்மீது பாயத் துவங்குகின்றனர்—பதவிப் பாணம் கையிலிருக்கிறது என்ற காரணத்தால்.

சில நகர சபைகளுக்கும், பொது வாசகசாலைகளுக்கும் தாக்கீது அனுப்பப்பட்டிருக்கிறதாம்—"மாலை மணி" "திராவிடநாடு" "விடுதலை" முதலிய இதழ்களை வாங்கக்கூடாதென்பதாக.

சிப்பை எடுத்து மறைத்துவிட்டால் திருமணம் எப்படி நடக்கமுடியும், என்று எண்ணினனுமே சிந்தையில் தெளிவில்லாதவனெருவன், அதையும் மிஞ்சுகிறது — ஆட்சியாளர் பிறப்பித்திருக்கும் இந்த உத்திரவு.

'மாலைமணி' வாங்கக்கூடாதென்று சேலம் நகர சபையில் சில 'மகானுபாவர்'கள் தீர்மானம் கொண்டு வந்தனராம்—தீவிரமாகப் பேசினராம்.

வெள்ளை நிறத்தைக் கண்டு காக்கையென்று கருதுபவனை கண்கெட்டவன் என்றே கூறுவர்—தெளிவுள்ளோர். ஆளவந்தவரும், அவர் தம் கட்சியினரும் கண் கெட்டவர்களல்ல; ஆனல் கருத்துக்கெட்டவர்களாகிக் கொண்டிருக்கின்றனர்!

"வீசு, பாணத்தை! விடாதே, துரத்து அந்தத் தியாகியை! வீணர்கள் அவர்கள்—சொன்னதை மறந்துவிட்டுச் சொகுசாகத் திரிகின்றனர்! துரத்துங்கள்-பிடியுங்கள்! ஏமாற்றிவிட்டாயே — எத்தனுகிவிட்டாயே என்று கேளுங்கள்!"

இதுபோன்ற பலாத்காரப் படலத்தைச் சிருஷ்டிக்கும் நோக்கம் கொண்டதல்ல 'மாலை மணி'! காமா சோமாவென்று கட்சிச் செய்திகளை மக்களுக்குத் தெரியப்படுத்த, கஷ்ட நஷ்டங்களுக்கிடையே வெளி வருவது! இயக்கத்தின் இதயத்தை ஒலிப்பது! அகில உலகத்தையும், அங்கு நடைபெறும் கொந்தளிப்புகளையும், அன்றன்றும் மக்களுக்குச் சமர்ப்பிக்கும் ஆவல்கொண்டதாயினும், அதற்கான வசதிகளைத் தேடிக்கொண்டு நிற்பது!

அதைக் காண ஆட்சிப்பீடமேறிய 'அசகாய சூரர்'களுக்குத் தாங்க முடியவில்லை! இதுபோலவே, 'திராவிடநாடு' 'விடுதலை' ஆகிய இயக்கஏடுகளையும் தடுத்துவிட முயற்சி செய்கிறார்களாம், சிலஊர்களில்! செய்திகள் வந்தவண்ணமேயுள்ளன.

இந்த ஏடுகள் முன்னேற்ற முரசுகள்! இது தெரிந்தும், தெளிவாகப் புரிந்தும் தடுக்கிறார்கள், ஆற்று வெள்ளத்திற்கு அணை போடுகிறார்களாம், வைக்கோல் துரும்புகளால்! தோற்றுப்போவார்கள், ஆணவச்சதிராடும் சர்க்கார்—இது உறுதி!

சஞ்சலம் சமர் புரிய, சதி-சதிராட, கோபம் குதிக்க, மக்கள் பணியாற்றும்இயக்கஇதழ்களுக்குத்திரையிட, திரை மறைவில் திட்டம் தீட்டுகின்றனர்—வேறொரு வேலையுமில்லாது திண்ணைச் சாமிகளாகயிருக்கும் அவர்தம் கட்சியினரும் அதை நிறைவேற்றி வைக்க ஆங்காங்கு முயற்சிக்கின்றனர். முனிசிபல் சபைகளிலே எதிர்ப்புகள் — கமிஷனர்களுக்குத் தாக்கீதுகள், காரசாரமாகக் கிளம்புகின்றன. இயக்க இதழ்கள் பொதுவாசக சாலைகளில் இல்லாமல் செய்துவிடவேண்டும் என்ற ஆத்திரத்தின் காரணமாக.

கூவிப் பாடிடும் குயில், ஆடிக்களித்திடும் மயில், வட்டமிடும் வானம்பாடி, கவலையின்றி சலசலவென ஓடியாடும் நீருவி, பேதம் பாராது பெய்திடும் மழை, கதிரவனின் காலைக் காட்சி, தேன் சொட்

டும் மதிவிரி ஒளி — இவைகளைக் காணுதே என்று கட்டுப்படுத்திவிட முடியாது! கத்தி வீச்சுகளால், பாணப் பிரயோகங்களால், அடக்குமுறைப் பலத்தால் மனித ஆசையை மண்மூடிவிட முடியாது!

மறைத்து "பாராதே—பார்த்தால் தருவேன் உனக்குத் தண்டனை" என்று தடுத்துவிடவும் முடியாது. பத்திரிகை—எண்ணங்கள் மலருஞ் சோலை! கருத்துக்கள் பழுத்துக் குலுங்கும் காகிதக் காடு! எல்லோருக்கும் சொந்தமான—இயற்கைப் பூங்கா!

'இதற்குள் நுழையாதே' என்று—ஈட்டியை வீச எத்தனிக்கின்றனர்—'நல்லவர்'கள் என்று கூறிக்கொண்டு நாடாள வந்தவர்கள். மனிதனின் அறிவுத் தாகத்தை அணைபோட்டுத் தடுத்துவிட முடியாது—ஆனாலும் ஆசைப்படுகின்றனர், 'அக்கிரமம் எழுத்துரிமை பறிக்கப் படுவது' என்று எக்காளமிட்டு, இன்று அரியாசனம் அமர்ந்ததும்.

பத்திரிகைகளைப் படியாதே — இந்தப் புத்தகம் கூடாது—அந்த நாடகம் ஆபத்து—என்று அலறிக் கொண்டு, அடக்குமுறை அம்புகளை வீசுகின்றனர் வீராவேசமாக.

"பரமசிவனின் பரிபூரணமான அவதாரமல்லவோ தாங்கள்! தங்களது சக்தி கடவுளை யொத்ததல்லவோ!" என்று திருப்பதிகம் பாடிக் கிடந்தால் தேனபிஷேகம் செய்வாராம். அதிப்பாவுக்குப் பதில், "எல்லாம் போலி வேஷம்! எத்தனை தாசி தெரியுமா! அவர்களுக்காக அவர் செலவழிக்கும் தொகை எவ்வளவு ஆயிரங்கள் அறிவீரா! அவரைத் தர்மதாதாவென்று புகழ்கிறீர்கள்—ஏழை யொருவன் போய் நின்றால் என்ன கிடைக்கும் தெரியுமோ? அடி—உதை—தான். அதை யறியாமல் பேசுகிறீர்களே—அவர் கடவுளல்ல, காம சொரூபி!" என்று உண்மையை எடுத்து எவராவது பேசினால், பேசியவர் சிறிது நாட்களில் இந்த உலகத்திலிருந்தே மறைந்து விடுவாராம்!

காட்டு ராஜாக்களும், பண்டார சன்னதிகளும் வசிக்கும் பக்கத்திலிருக்கும் கிராமங்களில் பேசிக் கொள்வர் இப்படி. 'எதிர்த்துப் பேசினவனை இல்லாமற் செய்துவிடுவார்கள். எனவே, ஏதோ உங்கள் வேலையைப் பார்த்துக்கொண்டு போங்கள். எதைப்பற்றியும் பேசாதீர்கள்" என்று எச்சரிப்பது போல!

இந்தக்காட்சிபோலவே இருக்கிறது—ஆளவந்தாரின் கருத்தும் போக்கும். இவர்களிடமுள்ள குறைகளை எடுத்துச் சொல்வதும், போக்கைக்கண்டிப்பதும், பொல்லாங்கு நிறைந்ததாகவே தெரிகிறது!

எதிர்க்கட்சி யென்றால், 'எடு ஆயுதத்தை! தீட்டு சட்டத்தை!' என்றே கர்ச்சிக்கின்றனர். கண்டித்துப்பேசுகின்றனரா, போடு 144! குறைகளை விளக்கி விஷயம் மக்கள் மனதில் படுமாறு எழுதுகிறார்களா, போடு தடை உத்தரவு! என்பதாக, வெறிப்பாதையிலேயே விளையாடுகிறார்கள்.

கடவுளின் பிம்பம் என்று கூறிக்கொண்டு தனது 'திருவிளையாடல்'களை மறைக்கிறார் பண்டார சன்னதி! இவர்களோ, 'சுயராஜ்யம் வாங்கியது நாங்கள்தான்' என்று கூறிக்கொண்டு தங்களது சூதுகளை நடத்தத் துணிகிறார்கள்!

ஆட்டிப் படைக்கும் காட்டுராஜாவுக்கு 'நம்மை யார் கேட்கமுடியும்?' என்ற அகங்காரம்! அதே போல 'நம்மை யார் ஜெயிக்கமுடியும், என்ற திமிர் ஆளவந்தாருக்கு!

x x x

பத்திரிகை—மக்களின் அறிவுத் தூதுவன்! அதைத் தடுப்பதில் இவ்வளவு ஆவேசத்தாகம் ஆளவந்தாருக்கு.

"பத்திரிகைகள்—எண்ணங்களைப்பரப்புபவைகள். எனவே இவைகளைத் தடுப்பதும் வேண்டுமென்றே நிறுத்துவதும் மனித உரிமைகளை அவமதிப்பதாகும்."

இது, மாண்டே விடேவில் கூடிய ஐக்கிய நாடுகள் சபையின் பத்திரிகைக் கமிஷன் நிறைவேற்றியிருக்கும் தீர்மானங்களில் ஒன்று.

மனித உரிமைகளை அவமதிப்பதாகும்—என்று கண்டித்திருக்கிறது மேற்படி கமிஷன். இக்கமிஷனின் பிரதிநிதிகளாக இந்திய நாட்டைச் சேர்ந்தோரும் சென்றிருக்கின்றனர்—பங்கெடுத்துக் கொண்டிருக்கின்றனர். அவர்களில் ஒருவரும் மறைந்த உத்தமர் காந்தியாரின் முதல் மகனுமான தேவதாஸ் காந்தி ஐக்கிய நாடுகள் சபையின் இக்கமிஷனின் வேலைகள் குறித்து, "உண்மையாகவே வரவர முன்னேறி வேலை செய்து வருகிறது" என்று குறிப்பிட்டிருக்கின்றார் — அமெரிக்காவில் பேசுகையில். தடுப்பது, மனித உரிமைகளை அவமதிப்பதாகும் — என்று உலக மக்களின் உயர்வுக்காக நிறுவப்பட்ட ஐ. நா. சபையின் ஒரு உறுப்பான கமிஷன் கருதுகிறது.

கமிஷன், மக்கள் நன்மைக்கான வகையில் பணியாற்றி முன்னேறி வருவதாக தேவதாஸ் காந்தி திருவாய் மலர்ந்தருளுகிறார். ஆனால், அவரது சொந்த நாட்டிலோ, ஆட்சியாளர் பத்திரிகைகள் மீது பாணப் பிரயோகங்கள் நடத்திக் கொண்டேயிருக்கின்றனர்!

உலக முன்னேற்றத்துக்கும் உலக மக்கள் உரிமை பாதுகாக்கப் படுவதற்கும் இது போன்ற நற்சேவைகளுக்காகவும் நிறுவப்பட்டதுதான் ஐக்கிய நாடுகள் சபையென்று நாட்டின் பிரதமர் பண்டிதநேரு வெளியிட்டு வருகிறார்.

ஐ. நா. சபைக்கு மதிப்புத்தரவேண்டும், அதன் தீர்ப்புக்கு மறுப்பு இருக்கக் கூடாது என்றும் அறிவுறுத்தி வருகிறார் அடிக்கடி.

அப்படிப் பட்ட ஐ. நா. சபையின் பத்திரிகைக் கமிஷன் பத்திரிகா சுதந்திரம் பறிக்கப்படுதல் கூடாது என்று கண்டிக்கிறது. சபையின் பெருமை குறித்து பிரசங்கமாகப் பொழிந்த தன்னும் நேருவின் ஆட்சியோ — காங்கிரஸ் அரசாங்கமோ, கண்மூடிக்கொண்டு சட்டங்களை வீசுகிறது! பத்திரிகைகளை பரவாது தடுக்க முயற்சிக்கிறது!

"நான் இட்டதே சட்டம்-எனது சுட்டுவிரல் காட்டியதே கட்டளை! இப்படித்தான் நாங்களிருப்போம். எங்கள் ஆட்சியேற்பட்டதும் இப்படித்தான் நடப்போம். எங்கள் வார்த்தையைத் தட்டி நடந்தால் அடக்குமுறைக்கு ஆளாகத்தான் நேரும்!" என்று சொல்லியவர்களல்ல — இன்றைய ஆளவந்தார். 'ஜனநாயகம்!'' என்று முழக்கமிட்டனர். 'சுதந்திரம் நமது பிறப்புரிமை' என்று கர்ஜித்தனர். எழுத்துரிமை, எண்ணும் உரிமை, பேச்சுரிமை ஆகியவைகள் இந்திய நாட்டின் ஒவ்



வொரு பிரஜைக்கும் கிடைக்க வேண்டுமென்பதுதான் எங்கள் அபிலாஷையென்று ஆரவாரித்தனர். ஆனால் அவையெல்லாம் இன்று ஆலாய்ப் பறக்கின்றன—புயலில் சிக்கிய தூசுகளாகி யிருக்கின்றன!

* * *

"கிராஸ் ரோட்ஸ்" என்ற ஆங்கில வாரஇதழ் பொதுஜன அமைதிக்குப் பங்கம் விளைவிக்கும் வகையிலிருப்பதாகக்காரணம் காட்டி சென்னை அரசியலார், சென்னை மாகாணத்துக்குள் அப்பத்திரிகை பிரவேசிக்கக்கூடாது என்று தடையுத்திரவு பிறப்பித்திருந்தனர். அந்த இதழ் பம்பாயிலிருந்து வருவதாகும். கம்யூனிஸ்டுக் கட்சியின் கொள்கைகளைத் தாங்கி வருகிறது என்ற காரணத்தால், அப்பத்திரிகை சென்னைமாநிலத்துக்குள் நுழையக்கூடாது என்று சட்டம் பிறப்பிக்கப்பட்டது.

சென்னை சர்க்காரின் மேற்படி தடையுத்தரவை ஆட்சேபித்துமேற்படி பத்திரிகையின் சொந்தக்காரர்கள் இந்திய சுப்ரீம் கோர்ட்முன் வழக்காடினர்.

சென்னை சர்க்காரின் தடையுத்தரவு சட்டவரம்பிற்கு அப்பாற்பட்டது, செல்லத்தக்கதல்ல, என்று சுப்ரீம் கோர்ட்—இந்திய நாட்டின் உயர்நீதிமன்றம் — மே 26ந் தேதியன்று தீர்ப்பு வழங்கியிருக்கிறது.

பொதுஜன அமைதி என்று காரணங்காட்டி, இஷ்டப்படி சட்டங்கள் பிறப்பித்தால் அது செல்லத்தக்கதல்ல என்று விளக்கும்படியாகமேற்படி தீர்ப்பில் குறிப்பிடப்பட்டிருக்கிறது.

சென்னை அரசாங்கத்துக்கு நல்ல சவுக்கடி—சுப்ரீம் கோர்ட் தீர்ப்பு.

தன்போக்கு பொல்லாததாக இருக்கிறது என்று எடுத்துச் சொல்வோரை யெல்லாம் கற்களால் தாக்கிக்காயப்படுத்துபவன் — மக்களால் மதிக்கப்படமாட்டான். நீதியும் அதற்குத் துணைநிற்காது என்பது தான் 'கிராஸ் ரோட்ஸ்' வழக்கில் சுப்ரீம் கோர்ட் தந்திருக்கும் தீர்ப்பின் எதிரொலி.

இதை, எடுத்ததெற்கெல்லாம், அடக்குமுறையையும், எதிர்க்கட்சிப் பத்திரிகைகளின் பிரச்சாரத்தை அடக்க திரைமறைவிலும், திட்டங்கள் தீட்டியும், வீசிவிளையாடும், சென்னைமாநில சர்க்காரின் திருப்பார்வைக்கு கொண்டுவருகிறோம்.

பொதுவாசகசாலைகளில் — 'மாலைமணி'யின் ஒலி இல்லாமற் செய்துவிடலாம் — அதற்கான உத்தரவு பிறப்பிக்கச் சட்டம் இருக்கிறது உங்களுக்குத் துணைசெய்ய!

ஆனால், மக்கள் இதயங்களில் எதிரொலித்துக்கொண்டிருக்கும் 'மாலைமணி' போன்ற இயக்க இதழ்களின் ஓசையை மடக்கிவிடமுடியாது — அவைகளின் ஓசை வளரும்! வளரத்தான்போகிறது!! இந்தப்போக்கு தகாது!', எதிர்க்கட்சிகளின் வாயைப்பூட்ட, காங்கிரஸ் பிரமுகர்களைத்தூண்டி காரியமாற்றச் செய்வதாலும், வெற்றிகாண முடியாது, உணர்வீர், என்று, எச்சரிக்கிறோம் — இவர்களை 'சுதந்திரம்' பேசி இன்று 'அது என்ன! சுக்கா — அல்லது மிளகா' என்று கேட்கும் சூரர்களை—ஆளவந்தார்களை!

✲

## மகிழ்ச்சி

நமது குத்தாலம் ஏஜண்டு தோழர் வீ. சம்பந்தன், தோழியர் ஜெயமணியை, 30-4-50ல் மணந்த செய்தி கேட்டு மகிழ்கிறோம்.

---

## அறிவிப்பு

பரிமளம் பதிப்பக (சி. என். ஏ. தீட்டிய) வெளியீடுகளின் முழு விற்பனை உரிமையும் கீழ்க்கண்ட விலாசத்தாருக்குக் கொடுக்கப்பட்டு விட்டது. எனவே புத்தகங்கள் தேவைப்படுவோர் நேரே கீழ்உள்ள முகவரிக்கு எழுதிப் பெற்றுக்கொள்ளவும்.

முகவரி:—

**பகுத்தறிவுப் பாசறை**
147, பவளக்காரத் தெரு
மண்ணடி சென்னை

---

## புதிய நாயனர்

(15-ம் பக்கத்தொடர்ச்சி)

"அவசரப்படாதீர்கள்... பொறுத்திருந்து பாருங்கள்!" என்று வெளியேறினேன்.

நான் சிந்தித்தேன், வெகுநேரம் வரை! கடைசியில் ஒரு முடிவிற்கு வந்தேன்.

இதோ, இந்தக் காகிதக் கற்றையைப்பார்த்தாயா, இதுதான் வரிக் கழுதை நாயனர் வரலாறு. இதனை அச்சிட்டு வெளியிடவேண்டும்—என் தந்தை இறந்த பிறகு! இதில் மிகவும் சிரித்துக்கொண்டே படிக்க வேண்டிய முக்கியமான கட்டம், நாயனர் மோட்சமடைந்த சம்பவம்! இன்னும் என் தந்தை சாகவில்லை. ஆனால் அதற்குள் அந்தப் பகுதியையும் எழுதி முடித்துவிட்டேன். சிவபெருமான்நாயனரை ஆட்கொள்ள கழுதை உருவெடுத்து, அவர் சென்ற மோட்டாரின் முன் வந்தார். அதன் மீது ஏற்றக் கூடாது என்றுதான் துரை திருப்பினன். அது மரத்தில் மோதிவிட்டது. இந்த இடத்தில்தான் சிவன் கழுதையானர்!

அந்த ஏட்டை நான் வெளியிடுவதால் அவர் நாயனராகி விடுவாராம்!

அதற்கு கைம்மாறு மருதப்பன் முகில் திருமணத்திற்கு அவர் சம்மதம் தரவேண்டும்—அதுவும் புரோகிதமின்றி! ஒத்துக்கொண்டார். திருமணத்தை முடித்துவிட்டேன்.

இனி அவர் நாயனராகவேண்டும் அவர் நாயனராகிறாரோ, இல்லையோ மனிதனுகிவிட்டார்! பாழும் வைதீகத்திற்கு ஒரு பெண்ணின் வாழ்வைப் பலியாக்காமல் விட்டாரே, அதுவே பெரும்புண்ணியமாயிற்றே!

இப்படித் தோழனுக்கு விளக்கின் மணிவாசகம், திண்ணையிலிருந்தபடி!

"அண்ணு அத்தானைப்பாருங்கள் சும்மா, என்னைக் கிண்டல் புரிந்தபடியே இருக்கிறாங்க! நாயனர் மகளாம் நான், ஆழ்வார் மகனுகப் போகிறாங்களாம். அத்தான்!"

என்று அறையைவிட்டு வெளியில் வந்தாள்!

"முகிலுக்கு என்ன வேலை?"

என்று சொல்லிக் கொண்டே, மணிவாசகத்திடம் வந்தான்,மருதப்பன்.

லொக், லொக்...சாவுடன் மன்றுடிக்கொண்டிருந்தார் புதிய நாயனர்.

திராவிட நாடு

ஞாயிறு] 4—6—50 [காஞ்சி

# வருத்த விருத்தம்

*

மூன்று ஆண்டுகள் பணியாற்றி
முக்காடிடும் நிலை பெற்றோம்!
வேதனை சிறிதும் மறைந்ததோ?
வெட்கம்! வெட்கம்!! வெட்கம்!!!

வருத்த விருத்தம் பாடி இருக்கிறார்—இந்தியத் துணைப் பிரதமர் பட்டேல், சில தினங்களுக்குமுன் உத்தமர் காந்தியாரின் ஊரான போர் பந்தரில். வேதனை விரைய, சோகம் துடிக்க, "மூன்று ஆண்டுகள் பதவி வகித்தும், வெட்கப்படக்கூடிய வகையிலேயே நடந்துவருகிறோம்" என்று வெளியிட்டிருக்கிறார். வெட்கம்! —வேதனையோடு வெளியிடுகிறார்.

சொந்தப் போர் குறைந்ததோ?
சுயநலப் போட்டி மறைந்ததோ?

என்று கேள்விகளைக் கேட்டுவிட்டு, இவ்வளவு மோசமான நிலையில் இருக்கிறோம், இந்த இழி நிலைக்கு வந்துவிட்டோம், எடுத்துச் சொல்லவே வெட்கமாயிருக்கிறது எனக்கு, என்று வேதனையோடு வெளியிட்டிருக்கிறார், காங்கிரஸ்காரர்களுக்கு அறிவுரை வழங்கும் முறையில்.

யார்? பட்டேலா—இரும்பு இதயத்தார் ஆயிற்றே அவர், எத்தனையோ முறை தாங்கள் சாதித்த காரியம் குறித்து மார்தட்டிப் பேசியவராயிற்றே, அவரா? அதுவும் இப்படியா பேசியிருக்கிறார் என்று கேட்கத் தோன்றும் சிலருக்கு. அவர், அங்கு பேசியிருக்கும் வார்த்தைகள், இதோ ஆங்கிலத்தில்,

> "During the last three years we have worked in a manner which has brought us only shame"

நினைவில் கலக்கமோ, நெஞ்சில் தவக்கமோ தாண்டவமாடாது "இந்த மூன்று ஆண்டுகளில் வெட்கப்படவேண்டிய ஓரே முறையில் நடந்துகொண்டிருந்திருக்கிறோம்" என்று, கூறியிருக்கிறார். கூடியிருந்த பல்லாயிரக்கணக்கானோர் முன்னிலையில்.

'பதவிப்பீடம் ஏறியதும், பாதை தவறிவிட்டனர் காங்கிரசார்! சுயநலச் சூறாவளி வீச, பதவிப்பாம்பு கடிக்க, சிதைந்து கரையும் கண்றாவிக் காட்சிச் சித்திரமாகி விட்டது காங்கிரஸ்! சொன்னது—நடைபெறவில்லை; இருந்ததும் குட்டிச்சுவராகிறது!' என்று, நம் போன்றோர், நாட்டை ஆள்வோரின் பாதைதவறிய, விஷயத்தை எடுத்துச் சொன்னால், ,ஏனடா உனக்கிந்தக் கெடுமதி; எப்போதும் ஏனிந்தப்புத்தி!" என்று விவேக உபதேசம் புரியவரும் நண்பர்கள் பார்வைக்கு, பட்டேலின் வருத்த விருத்தத்தைச் சமர்ப்பிக்கிறோம்.

பதவி வேட்டை
சுயநலப் போட்டி
சொந்தப் பொருமை

இந்த வார்த்தைகளால் வர்ணிக்கிறார் 'ஏன் நாம் வெட்கப்பட வேண்டிய நிலை' ஏற்பட்டதென்பதை விளக்க வந்த காங்கிரஸ் தலைவர். வேதனையோடு 'விஷத்தின் பக்கம் திரும்பிவிட்டோம்' என்று வெளியிட்டிருக்கிறார்.

"உண்மைதானே, அது? என்ன இருந்தாலும் அவரென்றால் அவர் தான்! கொஞ்சங்கூடச் சஞ்சலப்பட்டாரோ, பாருமே—துணிச்சலோடு வெளியிட்டு விட்டார்! தும்பையறுத்துக்கொண்டு ஓடும் காங்கிரஸ் பிரமுகர்கள் சிலரின் துடுக்கை எவ்வளவு பட்டவர்த்தனமாக வெளியிட்டுவிட்டார்! உண்மை தானே அவர் உரைத்தது—ஊதாரிகளாகத்தானே நடந்து கொள்கின்றனர் காங்கிரசாரும்! நம்மளவாள் என்றாலும் கண் போயிற்று என்றால் குருடன் என்றுதானே சொல்லவேண்டும். வேறு பெயரிட்டு அழைத்துவிட்டால் போதுமோ?"

இதுபோல பட்டேலின் பிரசங்கம் குறித்து, தங்களது குறைபாடுகளைத் தானகவே உரைக்க முன் வந்த அவரது பெருந்தன்மையைப் பாரீர்! அதில் தொக்கி நிற்கும் கண்ணியத்தைக் காணீர்! என்று 'சில ரசிகர்' குழாங்கள், திண்ணைப் பேச்சும் நடத்தலாம்.

உண்மை, தனது கட்சியின் கேவலநிலை குறித்து ஊராரிடையே ஒளிவு மறைவின்றி உரத்த கூச்சலிட்டு உரைக்க முன்வந்தால்—அத்துணிச்சல் பாராட்டற்குரியதுதான்! ஆனால் ஒன்று—அழுகிய மாம்பழத்தை மூடிவைத்து நல்லதாக்க முயற்சித்தால், முயற்சி ஓரிரு தடவை வெற்றியளிக்கலாம்—கண்டோரும் நல்ல மாம்பழம் என்றே நினைப்பர். ஆனால், அதைத் தொடர்ந்து காட்டி, ஏமாற்றிவிட முடியாது—எப்போதும் ஏமாந்தவர்களாக இருக்கமாட்டார்கள் மக்கள்.

எனவே, கண்ணியமோ அல்லது கவலைக் கண்ணீரோ எதுவாயினுஞ் சரி, பட்டேலின் விருத்தத்தால ஒன்றுமட்டும் தெளிவாகத் தெரிகிறது, அவரது கூற்றுக்களிலிருந்து. காங்கிரசார் ஆட்சிப் பீடமேறி மூன்று ஆண்டுகளில் நாம் வெட்கப் படக்கூடிய நிலைக்கு வந்துவிட்டோம என்றே பட்டேலும் கூறுகிறார்! எனவே, இந்த மூன்று ஆண்டுகளில் —காங்கிரசாரின் ஆட்சிக் காலத்தில் —ஆளவந்தோரே வெட்கப்படக் கூடிய அளவுக்கு நாடு கொண்டுவரப் பட்டிருக்கிறது — நாட்டை யாளும் காங்கிரசாட்சியினர் நடந்துகொண்டு வருகின்றனர். இந்த உண்மை, இது வரை எதிர்க்கட்சிகளால் கூறப்பட்டு வந்ததுபோய் இப்போது ஊராள்வோரின் தலைவரே ஒப்புக்கொள்ளும்படி ஏற்பட்டிருக்கிறது.

முகத்தை மூடி முக்காடு போட்டுக்கொள்ளவேண்டியபடி 'வெட்கம் ஏற்படும்'வகையில் நடந்துவந்திருப்பதாக—இந்தியாவை ஆட்டிப் படைக்குமளவு செல்வாக்குப்பெற்ற பட்டேல் அறிவித்திருக்கிறார்.

பட்டேல்—இந்தியாவின் துணைப் பிரதமர் — காங்கிரசுக்குள்ள இரு கரங்களில் ஒருவர்! மூன்றாண்டுகளாக நாட்டை நடத்திச் சென்று கொண்டிருப்பவர்—அவரே வெளியிடுகிறார், வெட்கத்தைத் தரும்வகையில் தங்களது நடவடிக்கை இருந்து வந்திருப்பதாக.

X X X

இன்னொருவர்—நேற்றுவரை அவரும் இந்திய மந்திரி சபையில் அங்கம் வகித்தவர். அவரும் சோகத்துடன் வெளியிட்டிருக்கிறார் 'பதவி வகிக்க இனி என்னால் இயலாது—



நான் விலகிக்கொள்கிறேன்' என்று கூறித் தனது ராஜிநாமாவைச்சமர்ப்பித்துவிட்டு,

> "இரண்டாண்டுகளுக்கு முன்னரே நான் பதவிக்கு வந்தேன். அப்போது பல காரியங்களைச் செய்யவேண்டுமென்று ஆசையோடு வந்தேன். சிலதை நிறைவேற்றத் திட்டமும் தீட்டினேன். ஆனால், இன்று அவைகளை நிறைவேற்றாமல் நான் செல்கிறேன்! இரண்டாண்டுகள், முயன்றும் முடிக்காமல் செல்கிறேன்! என்னால் முடிந்த அளவு பாடு பட்டும் அவைகள் முடியவில்லை நான் செல்கிறேன்!"

இந்த வருத்த விருத்தத்தைச் சிந்தியவர் அகதிகள் புனரமைப்பிலாகாவை நிர்வகித்து சமீபத்தில் ராஜினமா செய்தவர். —மோகன் லால் சாக்சேனா. இவரும் — பழுத்த காங்கிரஸ் காரர்தான், பல முறை தியாகத் தழும்புகளை உடம்பில் பெற்றவர்தான்! அவர்-வேதனையோடு வெளியிட்டிருக்கிறார்—'பதவிக்கு வந்தபொழுது பலப் பல எண்ணினேன்—ஆனால் எண்ணியபடி எதுவும் நடக்கவில்லை. எனவே வெளியேறுகிறேன்' என்பதாக!

ஆட்சி நடத்துவது காங்கிரஸ்—அவரும் ஒரு காங்கிரஸ் வாதி—எனினும் நாட்டுக்குத் தான் செய்ய வேண்டுமென நினைத்தவைகளை நிறைவேற்ற முடியவில்லை—என்பதாக வெளியிடுகிறார். வேடிக்கையாகயிருக்கிறது, நமக்கு, அவரது விருத்தத்தைக் காண! மகிழ்ச்சியுடன் வந்தாராம் மந்திரியாக! ஆனால் எதுவும் செய்யமுடியவில்லையாம் தன்னால்—எனவே, வெளியேறுகிறேன் என்று வெளியிடுகிறார்!

X X X

> அடிப்படையிலே தகராறு வந்துவிட்டது — எனக்கும் இந்தியப் பிரதமருக்கும்! எனக்குத் தெரிந்தவரை, இயன்றளவு நாட்டுக்குப் பாடுபட்டேன். கூட்டுப் பொறுப்புடன் நடைபெறும் மந்திரிசபை—இந்திய மந்திரிசபை. ஆகவே, ஒருவர் தனது கருத்துத்தான் ஏற்றுகொள்ளப் படவேண்டும் என்று வலியுறுத்த முடியாது. ஒத்துப்போவதுதான் நல்லது —ஒத்துப்போகத்தான் வேண்டும். இந்நிலைமையை எண்ணியே நான் ராஜினமாச் செய்கிறேன்"

இந்திய அரசாங்கத்தின் நிதிமந்திரியாக இருந்து பணியாற்றி, சமீபத்தில் 'என்னால் இயலாது' என்று விலகிக்கொண்ட ஜான்மத்தாய், தனது ராஜிநாமாவுக்குக் காட்டியிருக்கும் காரணத்தில் ஒரு பகுதி இது.

ஜான்மத்தாய்,காங்கிரஸ்காரரல்ல, எனினும் மந்திரியாக இருந்தார், திறமை மிக்கவர் என்பதால்—காங்கிரசாரால் வலியுறுத்தப்பட்டு.

அவர் வெளியிடுகிறார், "ஒரு அரசாங்கத்தில் கூட்டுப் பொறுப்பு வேண்டும். பலர்சேர்ந்தது ஒருமந்திரி சபை. ஒருவர் இஷ்டப்படி எதுவும் நடத்தக்கூடாது. ஒத்துப் போனால் தான் காரியம் நடக்கும்" என்பதாக வெளியிட்டுவிட்டு 'எனக்கும் இந்தியப் பிரதமர் நேருவுக்கும் அடிப்படையிலேயே வேற்றுமை வந்துவிட்டது' என்று நாசூக்காகக் கூறியிருக்கிறார் — தான் விலகும்படி ஏற்பட்டதற்கான காரணங்களை.

"எனக்கும்-பிரதமருக்கும் கருத்து வேற்றுமை ஏற்பட்டுவிட்டது — நான் அவரிஷ்டப்படியே ஆடவேண்டியிருக்கிறது! என் யோசனைகளுக்கு மந்திரி சபையில் மதிப்பில்லை. எல்லாம் அவரிஷ்டப்படியே நடத்த வேண்டியிருக்கிறது, எனவே நான் வெளியேறுகிறேன்" என்று சூசகமாகத் தெரிவிக்கிறார் ஜான்மத்தாய்.

- பட்டேல்—வெட்கம் ஏற்படும் வகையில் தங்கள் போக்கு இருந்துவரு திருப்பதாகக் கூறுகிறார்.
- சாக்சேனா—தான் ஆசைப்பட்டது எதுவும் தன்னால் நிறைவேற்றப் படமுடியவில்லையென்று சொல்கிறார்.
- மத்தாய்—நேரு இஷ்டப்படியே நடக்க வேண்டியிருக்கிறது, என் கருத்துக்கு இடமில்லையென்று வெளியிடுகிறார்.

காங்கிரஸ் ஆட்சியின் போக்குக்கு இந்தச் செய்திகள் ஒரு நல்ல படப்பிடிப்பு. நாடு எத்தகைய நிலையிலிருக்கிறது என்பதற்கு நல்லதொரு எடுத்துக்காட்டு.

தேனும் பாலும் ஓடாதா! வாயும் வயிறும் நிறையாதா—சமதர்மகீதம் முழக்கோமா? சஞ்சலம் இருக்குமா-தீது நீடிக்குமா! பாருங்களேன் சுயராஜ்யம்மட்டும் வரட்டும் என்று பாடினர் — ஆடினர் — ஓடினர் — அமர்ந்தனர்!

ஆட்சியிலமர்ந்தபின் தங்கள் பாந்த மனோபாவம் குறித்துப் பெருமை பேசினர், "எப்படிச் சொல்லமுடியும் — எங்கள் மந்திரி சபை ஓரே கட்சியைச் சார்ந்தது என்று! எல்லா மந்திரிகளும் காங்கிரஸ்காரர்களா—இல்லையே! எங்கள் கட்சியைச் சேராதோரையும் சேர்த்துக்கொண்டிருக்கிறோம். திறமைக்குத்தான் பணிவு—இது எங்களது சித்தாந்தம்!" என்று பெருமை பேசினர்.

ஆனால் இன்றோ! ஆட்சியின் சூத்திரதாரி ஆயாசத்துடன் வெளியிடுகிறார் 'வெட்கம்' தலையைச் சாய்ப்பதாக! காங்கிரஸைச் சேர்ந்த சாக்

## மொழி வெறி!

கன்பூஷியஸ் எழுதிய கருத்துக்களை அறிவதற்காகத் தமிழன் சீனமொழி படிப்பதில்லை. ஏசுநாதரின் மணிமொழிகளை அறிவதற்காகத் தமிழன் ஹீப்ரூமொழி படிப்பதில்லை. புத்தரின் பொன்மொழிகளை அறிவதற்காகத் தமிழன் பாலிமொழி படிப்பதில்லை. அவ்வாறு இருக்குப்போது, வேதகாலத்து முனிவர்களின் கருத்துக்களையோ கண்ணன் காட்டிய வழியையோ மற்ற வேதாந்த நூல்களையோ அறிந்து பயன் பெறுவதற்காக தேவநாகரியில் வடமொழி படித்தே தீரவேண்டும் என்றால், அதை என்ன என்பது? மற்ற நாடுகளில் இல்லாத மொழிவெறி, இந்த நாட்டில் சாதி, மதத்தின் பெயரால் தலைவிரித்தாடுகின்றது என்றுதான் சொல்லத் தோன்றுகிறது.

—டாக்டர். மு. வரதராசனார்.

சேனு—வருத்தத்துடன் கூறுகிறார் ஆசை நிராசையாகி விட்டதென்று! மந்தாய் — ஒருவரிஷ்டப்படி ஆட வேண்டியிருக்கிறது, ஆகவே அங்கென்ன வேலையென்று தகவல் தருகிறார்!

X X X

நாடும் மக்களும் இந்த 'நல்லோரது' ஆட்சியில் எதிர்பார்த்தது ஏராளம். நன்மைகள்—நாடு முன்னேறுவதற்கான நற்செயல்கள் திட்டப்படும், சட்டமாக்கப்படும் என்று நம்பினர். ஆட்சிப்பீடமேறினுல் மக்களின் தொண்டர்களாக இருப்பார்கள்—மக்களுக்கு நன்மை தரும் யோசனைகளுக்குச் செவி சாய்ப்பார்கள் என்றெல்லாம் எதிர்பார்த்தனர். ஆனுல் இன்று எல்லாம் கானல் நீராயிற்று!

ராஜினுமாச்செய்த மந்திரிகள் தங்கள் விருப்பம், கருத்து, ஆகியவைகளுக்கு மதிப்பில்லை—மந்திரி சபையில் என்று வெளியிட்டிருக்கின்றனர்.

ஆளும் கட்சியின் சூத்திரதாரியான பட்டேலோ, தங்கள் ஆட்சி மக்களிடையில் மன அதிருப்தியை வளரச் செய்திருப்பதாக வெளியிடுகிறார்.

வருத்தம் கலந்த விருத்தமாக இருக்கிறது, மூவர் தரும் தகவலும். இரு மாஜி மந்திரிகள் தாங்கள் 'மாஜி'களாகவேண்டிய அவசியம், காங்கிரஸ் மந்திரிசபையில் நிலவும் வேதனையின் விளைவுதான் என்று வெளியிடுகின்றனர்.

மந்திரி சபையை ஆட்டுவிக்கும் பட்டேலோ, 'வெட்கம் வந்திருக்கிறது நம்தலைக்கு' என்று, தங்களாட்சியின் கேவலம் குறித்து, வெளிப்படையாகச் சொல்கிறார்.

மந்திரி சபை—மக்களுடைய நலனுக்காக இருப்பது. ஆனுல், மாஜி மந்திரிகள் வெளியிடும், தகவலோ மக்கள் நலனுக்கான வகையில் எதையும் அங்கிருந்தபடி செய்ய முடியவில்லை—என்பதைத் தெரிவிக்கிறது.

பத்தாயும்—சாக்சேனுவும் இந்த வேதனையை வெளியிடுகின்றனர், மாஜிகளான பிறகு!

மந்திரிகளைச் சிருஷ்டிக்கும் பொறுப்பும், நாட்டை இட்டுச் செலும் கவலையும் நிரம்பிய பட்டேலோ, இதுவரை 'வெட்கம்' ஏற்படும் வகையிலேயே நடந்து வந்திருப்பதாக வெளியிடுகிறார்!

வேடிக்கையாக இருக்கிறது, இவர்களது விருத்தங்களைக் காண! வருத்தமும் சோகமும் இதயத்தை வாட்டுகிறது, இத்தகையோர் வசம் நாடு அகப்பட்டுக்கொண்டதே என்பதை எண்ணும்போது!

✲

## வானெலி
|
## தலைவலி!

✲

ரேடியோ நிலையத்தை அறிவு பெருக்கும் சாதனமாகப் பயன்படுத்தலாம். மக்களுக்குக் கேளிக்கை நல்கும் கருவியாக அது பயன்படலாம். ஆனுல், நம் நாட்டில் இத்துறைகளில் முன்னேறி இருக்கிறோமா என்றால் இல்லையென்றே கூறவேண்டியிருக்கிறது. ரேடியோ நிலையம் அறிவு பெருக்கும் நற்பணிக்கான எத்திட்டங்களையும் மேற்கொள்ளவில்லை; உல்லாசமான பொழுது போக்குக்கும் அவை வழி வகுக்கவில்லை. ஆனுல் டில்லி அரசாங்கம் இடும் கட்டளைகளையும் மேற்கொள்ளும் நடவடிக்கைகளையும் ஒருமொழியடுத்து மற்றெரு மொழியில் மக்கள் சலிப்படையும் வரையில் எடுத்தோதமட்டும் அவை தவறுவதேயில்லை. எனவே, ரேடியோ 'தலைவலி' தரும் சாதனமாகவே விளங்கி வருகிறது.

—பொன்னி

## சந்தாதாரர்களுக்கு

"திராவிட நாடு" சந்தாதாரர்கள், சந்தா சம்பந்தமாகக் கடிதம் எழுதும்போது சந்தா எண்ணைக் குறித்தெழுத வேண்டும். சந்தா எண் குறிப்பிடாத கடிதங்கள் கவனிக்கப்படமாட்டா. சந்தா முடியும் தேதி ஒவ்வொரு முகவரிக்கு அடியிலும் குறிப்பிடப்பட்டிருக்கிறது. அதைப் பார்த்துச் சந்தாவைப் புதுப்பித்துக் கொள்ளவும்.

மானேஜர்.

சுழல் விளக்கு

(12-ம் பக்கத் தொடர்ச்சி)

களைக் கூட்டிப் பொதுப்பிரச்சினைகளை அலசுகின்றனர். அடிப்படைத் தேவை, அடிவயிற்றுப் பிரச்சினையைத் தீர்க்க ஆயிர மாயிரம் ஆண்டுகளாக வாழ்ந்தும் வழிகாண முடியவில்லை!

பசியை ஒழித்துக் கட்ட ஒரு முயற்சி — பொதுவழியைக் காண வேண்டும். இராம இலக்குமணரைக் கூட்டிச்சென்ற விசுவாமித்திரர் காதுகளில் ஓதினராம், பசியெடாதிருக்க, மந்திரங்களை! நமக்கு யார் ஓதுகிறார்கள்?

பிள்ளையோ, பிள்ளை......என்று பெரும் பசியைப் போக்க விற்பனைக் கூடாரத்தில் விலாவலிக்கக் கூவுகிற செய்தியுந்தான் கிடைக்கிறது. அப்படி விற்கப்படுகிற பெண்கள் ஓட்டல்களிலும் வேறுபலகேளிக்கை நிலையங்களிலும்பணிப் பெண்களாக அமர்த்தப்படுகிறார்கள் என்று அறிகிறபொழுது, விழி மழையைப் பொழிகிறது!

பசிக்குப் பிள்ளையைப் பலியிடும் கோரச்செய்தியைப் படிக்கிறோம். அதே பக்கத்தில், மாணிக்க லோலாக்கை மனைவிக்குத் தர, அவள் மறுக்கவே, அதனைத் தன் நாய்க்குப் போட்டாராம், இலண்டன் மாநகரில், ஒரு சீமான். இந்தச் செய்தியையும் படிக்கிறோம்.

இந்த வேதனையை எப்படிச் சித்தரிப்பது? எப்படி வருணிப்பது?

பிள்ளையோ, பிள்ளை.......என்று மனித விற்பனை செய்யும் இந்தப் பரிதாபக் காட்சியை எப்படிச் சகிக்கிறது, உலகு?

—❀—

## வருத்தம்

வந்தவாசி 'திராவிட நாடு' ஏஜண்டு தோழர் வடிவேலின் சகோதரர் திரு. கைலாசம் இயற்கை எய்தியதைக் கேட்டுப் பெரிதும் வருந்துகிறோம்.

✲



# சுழல் விளக்கு

## மலான் திட்டம், மகாமட்டம்!

சொந்த நாட்டை விட்டுப் போய்ச் சேர்ந்த நாட்டிலும் கொடுமை தொடர்கிறது — பிளவு, பேதம், பிரிவு, ஏற்றத்தாழ்வு வளர்கின்றன—படர்கின்றன! யாரிடம் சொல்லி யழுவது இந்தக் கேடுகெட்ட செய்தியை!

இந்திய நாட்டை விட்டுச் சென்றார்கள் அவர்கள் — இங்கு அவர்களைத் தாக்கியடித்த சாதிவெறி, சமயப்போர், வகுப்புக் கலவரம்,... ......அப்பப்பா அத்தனையும் விட்டுச் செல்கிறோம் என்று நம்பினர். அவர்களின் பெருமூச்சுப் புன்னகையாயிற்று! தாய் நாட்டை விட்டாலும், தனிநிலை அடைந்தாலும், தாழ்த்திவைக்கும் சூதைத் துறந்து, பிறப்பிலே பேதம் கற்பிக்கும் பித்தலாட்டத்தை நொருக்கிவிட்டு வந்துவிட்டோம் என்று எண்ணினர். ஏமாந்தனர்.

தென் ஆப்ரிக்காவிலே இந்தியர் நிலை வரவர மோசமாகிறது! காடியைக் கண்டு மிரண்டு கடும்புலி வாழும் குகைக்குள் நுழைந்து கொண்டாளாம், வழிதவறி காட்டிற்குள் சிக்கிக்கொண்ட கட்டிளங் குமரி யொருத்தி! சாதி வெறியைக் கண்டு மனம் புழுங்கியவர் இன்று நிறவெறித் தீயாலே வெந்து தவிக்கின்றனர்.

தென்ஆப்ரிக்காவின் வரலாற்றில் உலக உத்தமர் காந்தியாரின் நுழைவுக் காலத்திலிருந்து இன்றுவரை நிறவெறிக் கிளம்புவதும் அடங்குவதுமாக இருந்து வந்திருக்கிறது! ஊஞ்சலாடுகிறது, அலையாட்டம் போடுகிறது, நிறவெறி! வெள்ளையராம், கருப்பராம்...நிறத்திலே தரத்தைத்தேடுகிறது. எவ்வளவுவேதனை ...எத்துணை வெட்கம்!

வாழும் இடங்களில்கூட வருணபேதங் காட்ட முனைகிறது, தென் ஆப்ரிக்க சர்க்கார். இங்கே சொல்கிறார்களே, இது அக்ரகாரம், இது சேரியென்று சில சமூக சில்லரைகள், அதுபோலவே அங்கேயும் சொல்ல முனைந்து விட்டார்கள்.

மலான் சர்க்காரின் இனவெறி தலைதூக்கி யாடுகிறது! இங்கு வெள்ளையர் மட்டுமே, வாழலாம், குடியேறலாம், இந்த இடத்திலே கருப்பர்கள் இருக்கலாம். இதற்குமேல் போககூடாது என்று சட்டம் போடத் திட்டம் தேடுகிறார்கள். இதற்கு ஆதரவு நாடுகிறார்கள்!

இந்தச் சின்ன புத்தி, பாய்ந்தோடும் பகுத்தறிவுக்கு ஒவ்வுமா? உலகம் முன்னேறுகிறது என்கிறார்கள். இதோ அதற்கொரு திருஷ்டி பரிகாரம், சோளக் கொல்லையிலே கரும்புள்ளி, வெண்புள்ளி குத்தியுள்ள பொம்மைபோல! மலான் திட்டம் மட்டத்திலும் மட்டம், மகா மட்டம்! இன்றைய உலகுஎள்ளி நகையாடக் கூடியது! ஆனுலும் மலான் அழுத்தமாகப் பேசுகிறார், இன்னமும் இங்கு, சாதிக்கு "வக்காலத்து" வாங்குவதைப்போல,சாத்திரப் புரட்டுக்குப் படை திரட்டுவதுபோல, தீண்டாமை வாழ இங்கு ஆதாரங்கள் தேடுவதைப்போல!

தென் ஆப்ரிக்கா இந்தியர்கள் இக்கொடுமையைக் கொளுத்திச்சாம்பலாக்கக் கிளம்பிவிட்டனர். இந்தி யக்குடியரசையும், பாகிஸ் தானையும் உதவி கேட்டுள்ளனர். தாயகத்திடம் தங்கள் நிலையை எடுத்துவிளக்கி இருக்கின்றனர். ஐ.நா.சபையார் தலையிட்டு இந்த அக்கிரமத்திட்டத்தை அணுவுக்கு அணு சிதைக்கவேண்டும் என்று கேட்டுள்ளனர்.

காசி சென்றும், கருமம் தொலையாது......என்று காலை நீட்டிய படியே, பாட்டி சொல்வாளே, அது போலப்பிறந்தமண்ணைவிட்டு,உற்றார் பெற்றாரைவிட்டு, கடல் கடந்துசென்றும்,பேதம் அவர்களைப் பிய்த்துப் பிடுங்கித்தின்கிறது! பிளவு அவர்களின்இரும்பு இதயங்களை வெட்டிப் பிளக்கிறது! நிறவெறி அவர்களின் நினைப்பை, நோக்கத்தை நாசமாக்குகிறது! வெள்ளை கருப்பு என்று வெட்டிப்பேச்சுப் பேசி வேதனையை வளர்க்கிறது.

மலான் உலகத்துக்கு முன்நிற்கிறார், துளியும் பயமின்றி உலகப் போக்கை எதிர்த்து, இயற்கைவிதியை வழி மறித்து, அவருக்கு நல்ல பாடம்தரவேண்டும்,இல்லாவிட்டால் வளரும் பேதவுணர்ச்சி புதுப்புது இடந்தேடி விதவிதமான வேடங் கட்டி ஆட்டம் போடும்!மலான் திட்டம்.மாற்றப்படவேண்டும் இன்றேல் நிற வெறிக்காவது வரவேற்புக் கூற வேண்டும். பூசாரிக்கும் பூசைக்கடாவுக்கும் தோழமைபூணமுடியாது-கூடாது!

மலான் போடும், மனித இதயத் திற்கே எட்டாத திட்டத்தை மாற்ற மார்க்கம் காணவேண்டும்!

## மறைப் போட்டி

'அந்தக் கணபதிக்குத் தொந்தி பெருத்த விதம் என்ன என்ன......' என்றொருவன் பாட எதிர்ப் பாட்டு பாடவேண்டியவன், கொஞ்ச நேரம் விழித்துவிட்டு, சிறிது கனைத்துவிட்டு, '...தொந்தி பெருத்தவிதம் கொழுக்கட்டைத் தின்னதினுல் அண்ணே, அண்ணே!' என்று பாடுவான். இங்கே எரிந்த கட்சி, எரியாத கட்சியென்று போட்டியிடுவார்கள்!

போட்டியிலே ஈடுபட்டுள்ளவர்களுக்குக்கொஞ்சம் கோபமும் கலந்துவிட்டால், கேள்வி உருவில் மாறும், எதிரி திணறிடும் அளவு விசித்திரமாகும்! 'மறையவன் நாவி லுறைவது நிசமானுல் மலசலம் கழிப்பது எங்கே எங்கே........' என்று ஒருவன் ஒரு குண்டெடுத்து வீசுவான். மற்றவன் விழிப்பான்! இருவரும் புராண கால புத்தி படைத்தவர்கள் தாம்; இருந்தும் இப்படிப் போட்டியிடுவார்கள்!

நமது 'புண்ணிய' பூமியில் ஆராய்ச்சி அந்த அளவிலேதான் நிற்கிறது! அனுமானின் வால் நீளம். திரௌபதை யுரிந்த துகிலின் அளவு, இந்திரனுக்குள்ள கண்களின் எண்ணிக்கை......இப்படி நம்மவர்கள் ஆராய்ச்சியில் இறங்கியிருப்பார்கள்.

இங்கு நாம் கிழூடனைப் பார்க்க

முடிவதில்லை. ஆனால், நிமிடத்திற்கொரு ஞானியை, மோனநிலை எய்திய முக்தரை, சித்தரைச் சந்திக்கிறோம்!

மழை இங்கேயும்தான் பெய்கிறது—மேலை நாடுகளிலும்தான் பெய்கிறது! என்ன செய்வது? நம்மவர் மழையைப் பயிர் விளைக்கவும் பயன்படுத்தத் தெரியாது விழிக்கிறார்கள். அங்கு பயிர் மட்டுமல்ல, பகுத்தறிவையும் செழிக்கச் செய்கிறார்கள்!

மேகத்திற்குக் கடவுள் இந்திரன், மழைக்குக் கடவுள் வருணதேவன். நீரெல்லாம் பெண்ணின் வடிவம், கங்கையின் உருவம், கடலுக்குத் தலைவன் சமுத்திரராசன்...என்று கும்பிடவும், குனிந்து கொடுக்கவும் கற்றுக்கொண்டுள்ளோம், இடி, அர்ச்சுனன் தேரோட்டம், மின்னல், அவனது சவுக்கின் 'சொடுக்கல்'... என்று ஆராய்ச்சியறிவு விரிந்து பரவியிருக்கிறது!

உழவனுக்கு ஒரு மழை, வேதமோதும் வேதியர்க்கோர் மழை, பதி சொல் தவறாத பத்தினியர்க்கோர் மழை என்று திங்களுக்கு மும்மாரி பொழிந்திடக் கணக்கு சொல்லத் தவறுவதில்லை, குறிப்பிட்டபடி பெய்தாலும், பெய்யாவிட்டாலும்!

அமெரிக்காவிலே ஒரு விசித்திரப் போட்டி—ஆராய்ச்சியிலே ஒருவருக்கொருவர் எதிரெதிர் பக்கத்தில்! இரண்டுபக்க விஞ்ஞானிகள்போட்டியிட்டுள்ளனர்.

ஹார்வர்ட் பேராசிரியர் டாக்டர் ஹோவல் செயற்கை மழை பெய்விக்கச்செய்தாராம், புதுக்கண்டுபிடிப்பு முறைகளைக் கையாண்டு! விமானத்திலே சென்று உலர்ந்த ஐஸ்கட்டிகளை மேகங்களில் தூவினராம். அதன்மூலம் மழையை வரவழைக்கப் பிரயத்தனம் செய்தாராம். 'பகிரத' முயற்சியென்றுநாம்பேசுவோம். அங்கு விஞ்ஞான விளையாட்டென்று வேடிக்கையாகக் குறிப்பிட்டுவிட்டுச் சிரிப்பர்.

இதுகூட நம் சிந்தையை அதிகம் கவருவதில்லை. வேடிக்கை விரிகிறது வேறொரு நிகழ்ச்சியின்மூலம்! மழை பெய்வித்தால், டாக்டருக்கு ஒரு நாளைக்கு 35 பவுன் கிடைக்குமாம்! ஆனால் மழை பெய்விக்கும் முயற்சியைத் தடுத்துவிட முயற்சித்தனராம், நியூஜெர்ஸியில் உள்ள பொழுதுபோக்குக் கேளிக்கைக் கம்பெனியார்! ஏனெனில் அவர்கள் வரும்படிக்கு வழி கிடைக்கும்,மழை பொழியாமலிருக்கும் பொழுது தான்! ஆகவே அவர் பெறும் தொகையைப்போல் இரட்டிப்புத் தொகை தருவதாக வாக்களித்தனராம். ஆனால், அவர் மறுத்துவிட்டார்!

அக்கம்பெனியார், டாக்டரின் முயற்சிக்கு எதிர்ப்பு நடத்த வேறு விஞ்ஞானிகளின் உதவியை நாடினராம், தயவு வேண்டி ஓடினராம், ஒரு நாளைக்கு 175 பவுன் தருவதாகப் பணப்பாட்டு பாடினராம்! டாக்டர் லைகஸ், எட்வர்ட் ட்வார்டஸ் என்பவர்கள் அவர்களுக்கு உதவுவதாக வாக்களித்தனராம். சொன்னதைச் செய்து காட்டியுள்ளனர். ரேடியோ எலெக்ட்ரோ மாக்னேடிக் அலைகள் மூலம் மழைதரும் மேகங்களைக் கலையும்படிச் செய்து விட்டனர் என்று அறிகிறபொழுது வியப்பால் நம்முகம் விரிகிறது—வேடிக்கை நம் உதட்டில் சிரிப்பை மேய விடுகிறது—விநோதம், மூக்கின்மேல் விரலைத் தானே போகும்படி ஏவுகிறது!

இங்கு மழைக்காக யாகம், யோகம் வருணஜபம்! அங்கு போட்டி—மழையை வரவழைக்கவும், நிறுத்தவும் முடிகிறது அவர்களால்! அவர்களும் மனிதர்கள்—நாமுந்தான்... ...ஹூம் என்ன செய்வது?

## பிள்ளையோ, பிள்ளை!

இருபது நூற்றுண்டுகளைக் கடந்துவிட்டது உலகு...இருந்தும் ஆதியிலே ஏற்பட்ட அடிப்படைத் தேவைகளைப் பூர்த்திசெய்ய ஒரு மார்க்கம் காணமுடியாமல் தவிக்கிறது!

இருக்க இடம், இந்த விரிந்து பரந்த உலகில இல்லாது தவிப்போர் இல்லாமல போகவில்லை! உடுக்க உடையின்றி, மெய்யைக் கையில் போர்த்து, வெய்யிலிலும் குளிரிலும் வேதனைப்படுவோர் இருக்கிறார்கள்! உண்ண உணவிற்கும் வழியின்றி அழுவோர் தொகை குறையவில்லை — கூடுகிறது, எண்ணிக்கையில்!

பசியைப் போக்க வழி காணாது விழிக்கிறோம்.

கேட்க, நம் செவி மறுக்கிறது! படிக்க, நம் விழிகள் விரும்பவில்லை! நம் இதயம் அசைந்து, பிறகு அசைவற்று நிற்கிறது ஒரு கணம்!

பசியைப் போக்க, மானத்தை விற்றுவிட்டு, ஏற்பது இகழ்ச்சி என்ற இனச் சித்தாந்தத்தையும் மறந்துவிட்டு, கையில் ஓடேந்தி, கருத்தில் கவலையைத் தாங்கி, முகத்தில் எளிமையைக் காட்டி, வார்த்தையில் பரிதாபத்தைக் கூட்டி, பல்லெல்லாம் வெளியில் தெரியக் காட்டி, கையேந்தி நிற்கும் கொடுமையைக் காண்கிறோம் — சகித்துக்கொள்கிறோம்!

பசியைப் போக்கிட பெண்கள் 'வழுக்கும்' பாதையில் நடந்தோடும் நாற்ற நிலை நமக்குத் தெரியாததல்ல! தங்கள் பெண்மையை விற்று தங்கள் பிழைப்பை நடத்தும் இழிவைக் கண்டு நாம் இரங்குகிறோம், ஏதும் செய்ய முடியாவிட்டாலும்!

பசி வந்திடப் பத்தும் பறந்து போகும்!...இது பழமொழி! இதோ டோக்கியோவிலிருந்து ஒரு செய்தி—நம் நாட்டில் நடக்காத கொடுமையில்லை இது என்றாலும் கேட்டதும் திடுக்கிட வைக்கிறது, திகைக்கச் செய்கிறது!

பசியைப் போக்கத் திருடவில்லை, கொலை செய்யவில்லை, விபசாரம் புரியவில்லை! ஐயோ, பிள்ளையை விற்கிறார்களாம், ஜப்பான் உழவர்கள்! பத்து மாதம் சுமந்து பெற்ற பச்சிளங் குழந்தைகளைத் தங்கள் பசிக்குப் பலியிடுகிறார்களாம்!

அடிமை வியாபாரம் உலகத்தை விட்டுவிரட்டியடிக்கப்பட்டுவிட்டது. மனித விற்பனைக் கடை மூடியாகிவிட்டது! டிரேக், ஹாக்கின்ஸ்—கடல் தாய்கள் இப்பொழுதில்லை, அடிமைகளைக் கொண்டு வந்து, கொடுமை மார்க்கட்டில் விலை கூறிடும் நிலைமை போய்விட்டது! இருந்தும் பசிபோக்க தாம் பெற்ற 'மாணிக்கங்களை' விற்கிறார்களாம்!

பிள்ளையோ, பிள்ளை......பிள்ளை வாங்கலேயோ......என்று கூவுகிறார்களாம், ஜப்பானில்! எவ்வளவு துயரம் தரும் செய்தி இது! அவனி அவமானப்படவேண்டிய அக்கிரமம் பாருங்கள்!

உலகு மட்டும் பெருமையடித்துக் கொள்கிறது! அகில உலக அவை

(10-ம் பக்கம் பார்க்க)



புதிய நாயனர்

4-ம் பக்கத் தொடர்ச்சி

உன் தந்தை உன்னை எனக்குத் தர மறுத்துவிட்டால்......" அவன் கண்களில் நீர் தேங்கியது. அவள் தொண்டையடைத்துவிட்டது. 'அப்படியொன்றும் வந்துவிடாது அத்தான்' என்று தேற்றினள். அதை இப்பொழுது நினைத்துக் கொண்டாள். தேம்பினள்! தெளிவில்லாமல் புலம்பினள்!

அதுமட்டுமில்லை. அவள் நெஞ்சில் வேறொரு வேதனையும் குடிபுகுந்து கொண்டிருந்தது போலும்! அது என்னவென்று யாருக்குத் தெரியும்! அவளுக்குத்தான் தெரியும். அவள்தான் எதையும் சொல்லாமல் அழுது கொண்டிருக்கிறாளே!

மருதப்பன் ஒரு முறை பார்த்தான். அவனும் அவளை ஒரு தடவை ஆர்வத்தோடு நோக்கினன். அவ்வளவுதான்—மீண்டும் அழுகை! திருமணத்தை யெண்ணி அழுகிறாள், பருவப் பெண்! மலர்வதை எண்ணி வருந்துகிறது மொக்கு!

அது ஏதோ பொன்னன நேரம்' அப்படி, இப்படி...என்று அடுக்கிக் கொண்டு வந்தாரே அந்தக் கிழவர் யோசித்தாரா. அந்தப் பொற்காலத்தில் இந்தப் பெண் ஏன் புலம்ப வேண்டும் என்று! அவள் மனதை அரித்துத் தின்னும் ஏதோ ஒரு பயங்கர உண்மையை மறைத்துக் கொண்டு இப்படி அவதிப்படுவானேன்? அது நல்ல நேரமா, அழுகைக்குரிய காலமா?

நாளாம், கோளாம், நட்சத்திரமாம், சகுனமாம், சாத்திரமாம்...... அத்தனையும் மனித முயற்சிக்குப் போடப்படுகிற தடைக் கற்கள்! இதையுணராமல் பழைமை விரும்பிகள் அந்தப் 'புரோகித ஏற்பாடு களுக்குத் தலை வணங்கிவிடுகிறார்கள்! நாயனரும் அந்த இரகத்திலே சற்றுக் கெட்டிச்சாயம் உள்ளவர்!

முகில் இதையெல்லாம் எண்ணினள்; அழுதுவிட்டாள். தன் தந்தை, திருமணத்திற்கு நாள் பார்க்கப் போயிருந்தபொழுது அவள் மருதப்பனுடன் ஓடிவிட நாள் பார்த்தாள்! ஆனால் அந்தத் திட்டம் கூடாது என்று அவளே கைவிட்டுவிட்டாள்.

ஒரே காலம் — நாயனருக்கு மகிழ்ச்சி—அவர் மகள் முகிலுக்கு அழுகை, ஆத்திரம்!

X X X

கண்டக்டர் பரமானந்தம் மருதப்பன் பக்கத்திலே உட்கார்ந்துவிட்டான்.

"என்ன ஊருக்கு?" என்றான் பரமானந்தம்.

"எமப்பட்டினத்திற்கு!......"என்றான் சற்று மெதுவாக!

"என்னங்க அவ்வளவு சலிப்பு... வாழ்க்கையிலே வெறுப்பு வந்துவிட்டது!" என்றான் அவன்.

கண்டக்டருக்கு இரண்டொரு வார்த்தைகளில் விடையைச்சொல்லி நிறுத்திக்கொண்டான் தன் பேச்சை! அவன், நடந்த பல நிகழ்ச்சிகளை எண்ணிக்கொண்டான்.

முகில் ஒரு முறை அவனை உற்றுப் பார்த்தாள்—அவனது வேதனை ஊற்றெடுத்து ஓடத் தொடங்கிவிட்டது!

நல்ல நேரம், ஆகவே மோட்டார் வந்தது என்று பெருமையடித்துக் கொள்கிறார் நாயனர். இது நல்ல நேரமா? அவனது உயிரைப் பிரித்து ஒரு 'உதவாக்கரை'க்குக் கொடுக்கப் போகிறார்கள்!

பொருத்தம் பார்த்தாராம், பொருத்தம்! அவன் வருத்தம்யாருக்குத் தெரிகிறது? அல்லது முகிலின் முணு முணுப்புத்தான் யார் காதுகளில் விழுந்தது? நண்பன் மணிவாசகம் மன்றாடினான். இந்தக் 'கிழப் பிடிவாதம்' கொஞ்சமும் அசைந்து கொடுக்கவில்லை! அவர் போட்ட திட்டத்தை நிறைவேற்றுமல் விடமாட்டாராம். தன் பிடிவாதத்தை நிறைவேற்ற ஒரு பெண்ணின் வாழ்வை இப்படி நாசமாக்குகிறாரே.

மருதப்பன் ஏழை—இருந்தாலும் அவனுக்கு இதயம் இருக்கிறது—அதில், ஒரு பெண்ணைக் காதலிக்கும் ஈரவுணர்ச்சியும் இடம் பிடித்துள்ளது. அந்தப் பெண்ணை யடைந்து, வாழ்க்கையை நடத்தவேண்டும் என்ற உறுதியும் இருக்கிறது!

மருதப்பன் யோசித்தான். திட்டத்திற்குமேல் திட்டம்......என்றாலும், முகில் பயந்தாள்! ஓடிவிடலாம் என்றால், அவனிடம் தைரியம் இல்லை! எதிர்த்துப் போராடலாம் என்றால் பணம் இல்லை. எனினும், அவனுக்கு முகில் வேண்டும்!

முகிலை, அவன் தொட்ட நாளிலிருந்து, அவளை விட்டுவிடவேண்டிய நிலை வரும் என்று நினைத்ததில்லை. வேடிக்கைக்காக அவன் அப்படிச் சொல்வானேயன்றி, உண்மையில், முகிலுக்காக அவனும், அவனுக்காக அவளும் பிறந்திருப்பதாக எண்ணி வாழ்ந்தான்.

ஆனால், இப்பொழுது, அவன் எண்ணக் கோட்டை, இடிந்து பொடிப் பொடியாகிவிட்டது! தன் காதலிக்குத் திருமணம் — அதற்கு வேலை செய்யப்போகிறான், வேறொருவன் மாலையிடும் கோரக் காட்சியைக் கண்டுகொண்டிருக்க! அவன் இதயம் எப்படி இருக்கும்?

மோட்டார் ஓடிற்று! அவன் சிந்தனையோ சுற்றிச் சுற்றி ஒரே இடத்தில் வந்து நின்றது. ஆம், அவன் மனம், முகில், முகில்........என்று இசைத்தபடியே இருந்தது!

மருதப்பன் மனதை எப்படிச் சித்திரித்துக் காட்டுவது? வார்த்தைகள் கிடைக்கவில்லையே!

நாளும், நட்சத்திரமும், சாத்திரமும், பொருத்தமும் பார்த்து, ஒரு அன்பு இரட்டையரை வெட்டிப் பிரித்துவிட்டார்கள்!

மருதப்பன், மனம் புழுங்கியபடியே உட்கார்ந்திருந்தான். அவனால் வரவும் முடியவில்லை, அந்தத் திருமணக் கூட்டத்துடன்! வராமலும் இருக்க முடியாது! இருக்கக் கூடாது! மருதப்பன், சங்கட சகடத்தில் மாட்டிக்கொண்டு தவித்தான்!

டிரைவர் துரை, வேகத்தைக் கூட்டிக் கொண்டே போனான். ஏன்? நாயனர் நடத்தினரே, திருமண புராணக்காலட்சேபம், அப்பொழுது ஏதோ அன்று நாலேகால்மணி தங்கமான நேரமென்று உரக்க உரக்கப் பேசினரே, அதே நாலேகால்மணி அவன் நினைத்துக் கொண்டால் அவன் நெஞ்சு நடுங்கிற்று இந்த நேரத்தை நினைக்கவும் முடியவில்லை.

அவன் மனைவி மரகதம் — அப்பொழுது துடியாய்த் துடித்துக் கொண்டிருந்தாள்! பிரசவ வேதனை! மூன்று நாட்கள் குறையாதவேதனை! மருத்துவச்சி செய்யாத முயற்சிகள் இல்லை—எனினும் குழந்தை பிறந்த

பாடில்லை. லேடி டாக்டர் நிர்மலா வந்தாள். ஆயுதங்களின் துணையைக் கொண்டு குழந்தையை எடுக்க வேண்டும் என்று கூறிவிட்டாள். அப்படியே எடுத்தாள். இரட்டைக் குழந்தைகள், ஒன்றை யொன்று தழுவியபடி! அவைகளின் உடலெங்கும் புண்கள், ஆயுதங்களைக் கொண்டு எடுத்ததால்! முதல் பிரசவம், ஆகவே தாய்வீடு சென்றிருந்தாள், மரகதம்.

அவனுக்குச்சேதிவந்த நேரமும் மோட்டார் புறப்படுகின்ற நேரமும் ஒன்றாக இருக்கவே, அந்த 'டிரிப்பை' அவனே எடுத்துச்சென்று விடலாம் என்று எண்ணினான். ஆகவேதான் வண்டியின் வேகம் வரவர அதிகரித்தது.

மரகதம் எப்படியிருக்கிறாளோ, அவளுடைய நிலை பரிதாபத்திற்குரியதாகத்தானே இருக்கும். ஒருவேளை ஜன்னி கண்டிருக்குமோ, சுகப்பிரசவம் இல்லாவிட்டால் இப்படியெல்லாம் வரும் என்று சொல்வார்களே!.........துரையின் மனம் எண்ணெய் காயும் கொப்பரையாகி விட்டது!

அவன் ஆசை மனைவி...மணந்து ஓராண்டுதான் முடிந்திருக்கும்! அவள் மரித்து விடுவாளோ என்று எண்ணினான். அவன் கண்களில் நீர் தேங்கிவிட்டது.

X X X

மோட்டாரின் வேகம் மிகவும் உச்சத்திற்குப் போய்விட்டது!

உலகில் ஒவ்வொரு மனிதனும் ஒரு அனுபவக் குகையாகவே இருக்கிறான். அவனவன் சில அனுபவங்களை அடைகிறான். அதை மீண்டும் நினைக்கிறான். அதில் இனிக்கும் நிகழ்ச்சிகளும் இருக்கலாம், கசக்கும் காட்சிகளும் வந்திருக்கலாம்.

அப்படித்தான் அன்று பிரயாணம் செய்து கொண்டிருந்த பிரயாணிகளில் ஒவ்வொருவரும் எதையோ எண்ணிக்கொண்டு உட்கார்ந்திருந்தனர்.

மணி எட்டிருக்கும். சுற்றிலும் இருட்டு; பாதையோ,அடர்த்தியான காடு! மேலும் வளைவுகளுக்குக்குறைவில்லை! துரை அவ்வளவு வேகத்தில் போனாலும் விழிப்புடன்தான்ஓட்டிக் கொண்டு சென்றான்.

வளைந்து நெளிந்தோடிக்கொண்டிருந்தது, அந்த மோட்டார்வண்டி!

நாளை நடப்பதை யாரறிவார் பராபரமே......என்ற பண்டாரப் பாட்டுக்கு உண்மையில் அந்த நேரத்தில் நல்லமதிப்பு. இன்னும் இரண்டொரு நிமிடங்களுக்குப் பிறகு நடக்க இருந்த ஆபத்தை யார் அறிந்து தடுத்தார்கள்? ஒருவரும் இல்லை.

வண்டி ஒரு திருப்பத்தில் கன வேகத்தில் திரும்பிற்று.

கிரிக்......ஒரு சத்தம் — அவ்வளவுதான்! ஐயோ........மோட்டார் மோதிவிட்டது, ஒரு மரத்தில்! வண்டி நொறுங்கிவிட்டது! பிரயாணிகள் பலருக்குப் பலத்த காயம்.

கண்ணப்பருக்கு மண்டையிலே காயம்......அவர் சுய நினைவிழந்து விட்டார். திருமண விழாவிற்கென வந்து கொண்டிருந்த பதின்மருக்கு மேற்பட்டவர்களுக்கு இரத்தகாயம்! மணப்பெண் முகிலுக்கு அடி பலமில்லை. ஆம், மருதப்பன் அவளை அப்படியே தூக்கிக்கொண்டு, வண்டி நொறுங்குமுன் குதித்துவிட்டான் வெளியே! அப்படியும் அவர்கள் உடலில் புண் இல்லாமல் போகவில்லை.

X X X

## கோர விபத்து

அநாமதேயம் பஸ் சர்வீஸ் ஓடும் பாதையில், நேற்று இரவு எட்டு மணிக்கு, ஒரு மோட்டார் மரத்தில் மோதி பெருத்த விபத்துக்குள்ளாகி விட்டது. குறிப்பிடத்தகுந்த பரிதாபச் செய்தி யென்னவெனில் மோட்டாரில் மறுநாள் மணம் செய்ய வேண்டிய மணமகளும், இன்னும் திருமண கோஷ்டியாரும் இரத்தக் காயமடைந்து மருத்துவ விடுதிக்கு எடுத்துச் செல்லப்பட்டனர்.

இந்தச் செய்தியைப் படித்துக் காண்பித்தான் நண்பன் ஒருவன், மணிவாசகத்திடம்! அவன் சிரித்தான்.

"என்னப்பா, மோட்டார் கவிழ்ந்ததைப் பற்றிச் சொல்கிறேன். தந்தையும், தங்கையும் ஆபத்தில் சிக்கிக்கொண்டதைப் பற்றிப் பேசுகையில் சிரிக்கிறாயே!"என்றான் தோழன்.

"ஆம், நீயும் என்னுடன் சேர்ந்து சிரிக்கவேண்டும்—மகிழ்ச்சிக் கொண்டாட்டம் நடத்தவேண்டும். இந்த மோட்டார் கவிழ்ந்திராவிட்டால் என் தங்கையின் வாழ்க்கையல்லவா கவிழ்ந்திருக்கும்!"

என்றான் மணிவாசகம்.

"தந்தை சாவுப்படுக்கையில் கிடக்கிறார்...நீ என்னப்பா கிண்டல் பேசுகிறாய்!"

என்றான் தோழன், மீண்டும்.

மணிவாசகம் உரக்க, உரக்கப் பேசினான். அவன் சிரிப்பை யடக்க முடியவில்லை!

"ஏன்"

என்றான், தெளிவற்ற நிலையில்.

"நண்பா, கேள் விளக்கமாகச் சொல்கிறேன். நீ இப்பொழுது படித்த செய்தி பத்திரிக்கைக்காரர்களுக்குத் தெரிந்தது. அதற்கு முன்னும், பின்னும் பின்னிக் கிடக்கின்ற உண்மைகளை அந்தத் தாள்கள் அறியா—அறியவேண்டிய அவசியமும் இல்லை.

நான் உனக்குப் படித்துக் காண்பிக்கிறேன்—தாள்களுக்கு எழுதிய கட்டுரையில்லை! வரிக்கழுதை நாயனர் வரலாறப்பா இது...சிரிக்காதே, கேள்.

இந்த மோட்டார் விபத்து நடந்தால் என்தந்தை நாயனாரானர். என் தங்கை தன் இச்சைக்குகந்த மணாளனை மணந்தாள். மருதப்பன் மணமகனானன்! மணிவாசகம், தன் இலட்சியத்தின் ஒரு பகுதியை முடித்தான்!

தணிகாசலம், மோட்டார்விபத்து, ஆண்டவ அதிருப்தியின் அறிகுறி என்று எண்ணிவிட்டான். ஆகவே, இந்தத் திருமணம் வேண்டாம் என்று சொல்லிவிட்டான்.

இனிமேல்தான் கதையின் ருசிகரமான பகுதி!

என் தந்தையோ சாகவேண்டியவர்! என் தங்கை வாழப் பிறந்தவள். ஆனல் என் தந்தையின் பிடிவாதத்தால் அவளின் வாழ்க்கையைப் பாலை நிலமாகப் பார்த்தார். நான் போட்ட திட்டத்தை நிறைவேற்றுவதற்கு முன்னலேயே மோட்டார் விபத்து வந்து கை கொடுத்து என்னைக் காப்பாற்றிற்று!

தோழனே, உன்னிடம் ஒளித்துப் பேசப் போவதில்லை. வெளிப்படையாகச் சொல்கிறேன். திருமண வீட்டில் புகுந்து குழப்பம் விளைப்பதென்றே திட்டமிட்டு அந்த மோட்டாரைப் பின்பற்றித் தனிக் காரில் சென்றுகொண்டிருந்தேன். இல்லாவிட்டால் விபத்து நடந்த சில நிமிடங்களில் அவர்களுக்கு முதல்உதவி செய்திருக்க முடியுமா?

என் திட்டத்தைக் கேட்டால் பயந்துவிடுவாய்! ஆயிரம் பொய் சொல்லி ஒரு விளக்கை ஏற்றி வை ......என்பார்கள். அப்படித்தான் நான் புளுகிடத் திட்டமிட்டேன்.

என் தங்கை, தாயாகிவிட்டாள்! தந்தை மருதப்பன் என்று கூசாது கூறிட நினைத்திருந்தேன். ஆனல் நடக்கவேண்டிய அவசியமே இல்லாமற் போய்விட்டது.

மோட்டார் விபத்திற்குப் பின் யோசித்தேன்.

என் தந்தையின் மனமும் புண்ணாகாமல், என் தங்கையின் உள்ளமும்கோணமல் ஒருதிட்டம்போட்டு இந்த மணத்தைச் செய்யவேண்டும் என்று எண்ணினேன். அதில் வெற்றியும் பெற்றேன்.

படுக்கையில் கிடந்த தந்தையிடம் சென்றேன். அவர் என்னை ஆர்வத்தோடு பார்த்தார். நானும் அப்படியே!

"அப்பா, நீங்கள் சாகப்போகிறவர்" என்றேன், எடுத்தவுடன்!

அவர் முகத்தைச் சுளித்துக் கொண்டார்.

"உங்களுக்கு ஏதாவது பூர்த்தி செய்யப்படாத ஆசை இருந்தால் சொல்லிவிடுங்கள் செய்கிறேன்" என்றேன் நான்.

"செய்வாயா?"

என்றார், தெம்பை வரவழைத்துக் கொண்டே!

"கட்டாயம்......"

என்றேன் நான்.

"நான் நாயனாகவேண்டும்!"

என்றார், தன் ஆவல் முழுவதும் தொனிக்க!

பூ......இவ்வளவுதானே! அப்பா, நான் செய்கிறேன் நிச்சயமாக! நீங்கள்தான் ஏற்கனவே நாயனர் என்று ஊர் முழுவதும் பேசுகிறதே!" என்றேன் நான்.

"கேலியாடா, சாவுப்படுக்கையில்!" சீறினர் தந்தை.

(7-ம் பக்கம் பார்க்க)

# முத்தமிழ் கொழிக்க, நீ பாடு!

தலை.

முத்தமிழ் மாநாடு வாழ்க
மூதுரையால் பொது நீதியைப் பாடும் (முத்)

இடை.

புத்தியில் மேம்படும் புலவர் கொண்டாடும்
புத்தக வடிவினில் புதுமையை நாடும் (முத்)

தொங்கல்.

பகுத்தறிவுக் கொவ்வாத பஞ்சாங்கப் பாடைதனைப்
பார்ப்பனர்கள் சரிபாதி பாய்த்து விட்டார்
மகமதியர் மத்தியிலே மண்ணுட்சி புரியவந்து
மறுபாதி தனிஉருதை வழங்க விட்டார்
பகைத்துவைத்துப் பாராண்ட பரங்கியர்கள் ஆங்கிலத்தை
பதவிபெறும் படிப்பாகப் பரவ விட்டார்
மிகுத்துநின்ற தென்மொழியின் வேரறுக்க இந்தியது
விருப்பமென்றார் கட்டாய விளைவு காணீர்.

கழல்.

வந்ததும் போனதும் வாழ்வது தேடும்
சந்தையுமானது தமிழ்நாடு
சிந்தையி ஞலிதைத் தெளிந்து மேம்பாடு
செய்திடக் கோவையில் தினமொன்று கூடும் (முத்)

தொங்கல்.

கந்தன்வள்ளி கல்யாணக் காதல் பாட்டு
கண்ணன் பலகன்னியரைக் கலந்தபாட்டு
அந்திவண்ணன் சுடுகாட்டி லாடும்பாட்டு
அருத்தமற்ற சாமிகளுக் கனந்தம்பாட்டு
முந்தினவர் பாட்டிலுள்ள மொழியைமாற்றி
முன்னேற்றத் தடையான மூடர்பாட்டால்
செந்தமிழும் தென்னடும் சிதைந்திடாமல்
சீர்திருத்தப் பார்க்கள்பல திகழநன்றே.

கழல்.

மழையொடுபூமி உழவையும் தெய்வ
மாண்பினும் மேலாய் மதிதோனும்
அழகொடு வள்ளுவன் அறிநெறியோர்ந்த
அறிவுளராலே வழிகாணும் இந்த (முத்)

கோவையிலே நடந்த முத்தமிழ் வளர்ச்சி மாநாட்டிற்கு உடுமலை நாராயண கவி அனுப்பியிருந்த வாழ்த்து.

# 'கல்கி'யாருக்குக் கடிதம்!

சென்னை மாவட்ட திராவிட முன்னேற்றக் கழகச் செயலாளர், தோழர் கே. கோவிந்தசாமி, "கல்கி" இதழில் வெளிவந்த "ஹிந்தி ஏகாதிபத்யம்" என்ற கட்டுரையைக் கண்டு, 9—5—50 தேதியிட்டு கீழ்வரும் கடிதத்தை எழுதியிருந்தார்—திராவிட முன்னேற்றக் கழகத்தின் ஆசையை எதிரொலிக்கும் வகையில்:—

✲

(கடிதத்தின் நகல்)

திருவாளர். ரா. கிருஷ்ணமூர்த்தி அவர்கள்
ஆசிரியர் "கல்கி" சென்னை.

அன்புள்ள ஆசிரியர் அவர்களுக்கு வணக்கம். சென்ற மே மாதம் 7-தேதி "கல்கி" இதழில் வெளியான "ஹிந்தி ஏகாதிபத்தியம்" என்ற கட்டுரையைக் கண்ணுற்றபின் தங்கள் உள்ளக்கிடக்கையை உணர்ந்து பெரிதும் மகிழ்கின்றோம்.

பிற மொழிகளையும், மொழியாளர்களையும் அடக்கியாண்டு ஆதிக்கம் செலுத்த அரசியல் போர்வையில் தேசிய மொழி என்பதாக ஹிந்தியை ஓர் கருவியாகப் பயன்படுத்த முயலுகின்ற ஹிந்தி வெறியர்களின் சூழ்ச்சியை தமிழர்கள் வன்மையாக எதிர்க்க வேண்டும், என்ற தங்களது அரிய யோசனையை தமிழர்கள் மனதார வரவேற்பர்.

திராவிட இயக்கத்தாராகிய எங்களது பல கிளர்ச்சிகளுக்குப் பிறகு இப்பொழுதாகிலும் பாரபட்சமின்றி தங்களது கருத்தை வெளியிட்டமைக்கு நாங்கள் உண்மையாகவே தங்களுக்கு நன்றி செலுத்துகின்றோம். பல ஆண்டுகளுக்கு முன்பே, ஹிந்தியை சிறு பிள்ளைகளுக்கு அரசியலார் கட்டாய பாடமாக ஏற்பாடுசெய்தபோது 'அத்தகைய முயற்சி முதலில் அற்பமாகத் தோன்றினும் பிறகு அது தமிழ்நாட்டின் வாழ்விற்கே விபரீதமாக மாறிவிடும்' என்பதை முன் கூட்டியே நாங்கள் தெரிவித்தோம்.

நாங்கள் மாற்றுக் கட்சிக்காரர்களானதாலும், எங்களது வேண்டுகோள்கள் அரசியல் எதிர்ப்புக் கண் கொண்டு பார்க்கப்பட்டதனாலும் அக்காலத்தே, எங்கள் வேண்டுகோள்கள் தங்களால் புறக்கணிக்கப் பட்டன. தற்போது ஹிந்தி வெறியர்களின் ஆதிக்கம் தமிழ்நாட்டிலுள்ள பிராமணர், பிராமணரல்லாத ஏனையோர் ஆகியோரது, வியாபாரம், பொருளாதாரம், கல்வி, கலை, நாகரீகம் ஆகிய அனைத்தையும் பாதிக்கின்றது என்பதை தாங்கள் உணர்ந்தவாறு, நாங்களும் உணர்ந்து மனம் புழுங்குகின்றோமென்பதைத் தங்களுக்குத் தெரிவித்துக் கொள்கின்றோம்.

இத்தகைய ஆபத்தினின்றும் மீளுவதற்கு செய்யப்படும் முயற்சிகளில் எங்களுக்கு எவ்வித குரோத எண்ணமோ கட்சிபேதமோ கிடையாது என்பதைத் தங்களுக்குத் தெரிவித்துக் கொள்ளுவதோடு, இந்த 'ஹிந்தி ஏகாதிபத்தியத்தை' நமது தமிழ்நாட்டைப் பொறுத்தவரை எதிர்த்தொழிப்பதற்கு ஒரு கூட்டு முயற்சியை உருவாக்குவதற்கு தாங்கள் ஒருப்படுவீர்களென பெரிதும் நம்புகின்றோம்.

இது காரியத்தில் நாம் காலம் தாழ்த்தத் தேவையில்லை. தாங்கள் அன்பு கூர்ந்து இக்காரியத்தில் கூட்டுப்பணியாற்ற ஆவன செய்ய நாம் கலந்து பேசி ஓர் முடிவு செய்துகொள்ளலாம். அப்படியாயின், எப்பொழுது சந்திக்கலாம், எங்கே சந்திக்கலாம் என்பதை தயை கூர்ந்து தெரிவிக்க விழைகின்றேன்.

வணக்கம்

கே. கோவிந்தசாமி
(செயலாளர்)
சே. மா. தி. மு. க.
Madras, 9—5—1950

✲

இக் கடிதத்தைத் தான் பெற்றுக் கொண்டதாக "கல்கி" ஆசிரியர் தோழர் ரா. கி. அவர்களிடமிருந்து கடிதம் வந்ததேதொழிய, வேறு எந்தவிதமான தகவலோ அல்லது விருப்பத்தை விளக்கும் பதிலோ வரவில்லை!

'கல்கி'யார் விடையெழுதுவாரா, இல்லையா என்பது கூட அல்ல முக்கியம், அவர் மனதிலே அரும்பியிருக்கும் அந்த உண்மையுணர்வு வளரவேண்டும் என்பது நம் ஆசை—அது வெறும் வார்த்தைகள் செய்யும் வாணவேடிக்கையாகப் போகக் கூடாது என்பதுதான் நம் கவலை. அவருக்கு ஏற்பட்ட காலங்கடந்த 'ஞானோதயம்' நமக்குப் புதிதுமல்ல, புரியாததுமல்ல—ஆகவே ஆச்சரியப்படவில்லை!

இந்தி ஏகாதிபத்தியத்தின் வெறிக் கூத்தின் முதலும் முடிவும் ஏற்கனவே நம்மால் எடுத்து விளக்கப்பட்ட பழங் கதை—பல முறைகளில், பல உருவங்களில்! 'கல்கி' யார் செவிடானுர்—ஊமையானுர் அப்பொழுதெல்லாம்! இப்பொழுது செவிடும்போய், 'பேசாமடந்தை' நிலையும் போய் உண்மையை ஊருக்குச் சொல்கிற அளவு தமது ஏட்டிலே 'தமிழ் மகனை' விட்டுத் தீட்டிடச் சொல்லும் அளவு திட மனது பெற்றுவிட்டது கண்டு மகிழ்கிறோம். ஆனால் இது 'சீசன் சரக்காகி' விடக்கூடாது! அவரது சிந்தனைத் தெளிவிலே நமக்கிருக்கிற நம்பிக்கையைக் கருக்கிவிடக் கூடாது!

அவர் விடையெழுதாமல் இருக்கலாம்—நமக்கு! அக்கரையில்லை. ஆனால் அவரை அதட்டிக்கேட்கும் அவரது உள்ளத்திற்கு விடை தந்துதான் ஆகவேண்டும்!

Edited Printed & Published by C. N. Annadurai M. A. at "Dravida Nadu" Press
95, Tirukkachinambi Street Kancheepuram.

